உ

அருட்கவி தவத்திரு

# ஸாதுராம் ஸ்வாமிகள்

அருளிச் செய்த

# திருஅருட்புகழ்த் திருப்பள்ளி எழுச்சிகள்

உள்ளிட்ட பாவை, மற்றும் பள்ளியெழுச்சிப் பாடல்களின் தொகுப்பு

## (மார்கழிப் பாராயணத் திரட்டு)


விநாயகர்


முருகன்


சிவபெருமான்


தேவி


வைஷ்ணவி


கருமாரி


கண்ணன்


அரங்கன்


ஐயப்பன்


ஆஞ்ஜநேயர்


அருணகிரி நாதர்


வள்ளிமலை ஸ்வாமிகள்


சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி


ஜயேந்த்ர ஸரஸ்வதி


பாரதமாதா

வெளியிடுவோர்:

**பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட், சென்னை-600061.**

*தலைப்பு:* அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அருளிச் செய்த

**திருஅருட்புகழ்த் திருப்பள்ளி எழுச்சிகள்**

உள்ளிட்ட பாவை, மற்றும் பள்ளியெழுச்சிப் பாடல்களின் தொகுப்பு

(மார்கழிப் பாராயணத் திரட்டு)

*பதிப்பு எண், தேதி:* முதல் பதிப்பு 11.12.2000

*வெளியிட்டவர்:* பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்,
மனை எண் 22, கதவு எண் - 10,
பொங்கி மடாலயம் தெரு,
நங்கைநல்லூர் (தெற்கு), சென்னை-61.

*பக்கங்கள்:* 92 *விலை:* ரூ. இருபத்து ஐந்து.

*Compiled and Published for Pongi Monambikai Trust by:*

**S.V.Subramaniyan,**

*(Managing Trustee, Pongi Monambikai Trust)*

Plot No. 22, Door No. 10, Pongi Mataalayam Street,
Nangainallur (South), Chennai-600061. ☎ 2323855



*Designed and Typeset by:*

R.Sridharan, "SWARNAPURI"

Plot No. T-7, First Cross, FortySixth Street, Nangainallur, Chennai-600061.
☎ 2321616, 2348445 e-mail: sridarr@vsnl.com

*Copies can be had from:*

1. S.V.Subramaniyan, Chennai-600061.
2. R.Sridharan, Chennai-600061.
3. Giri Trading Agency, Kapaleeswarar Sannidhi, Chennai-600004.

**Price Rs. 25.00**

திரு S. நாகராஜன் அவர்களுக்கு
அன்புடன் : ஸ்ரீ வே. ஸுப்ரமண்யன்



உ

ஸ்ரீ பொங்கி க்குமா

அருட்கவி தவத்திரு

2-1-2001

# ஸாதுராம் ஸ்வாமிகள்

அருளிச் செய்த

# திரு அருட்புகழ்த் திருப்பள்ளி எழுச்சிகள்

உள்ளிட்ட பாவை, மற்றும் பள்ளியெழுச்சிப் பாடல்களின் தொகுப்பு

## (மார்கழிப் பாராயணத் திரட்டு)





*11.12.2000 -அன்று வெளியிடுவோர்:*

**பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்,**

**ஸ்ரீ பொங்கி மடாலயம், மனை எண் 22,**

**கதவு எண் - 10, பொங்கி மடாலயம் தெரு,**

**நங்கைநல்லூர் (தெற்கு), சென்னை-600061.**

# பொருளடக்கம்

## அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அருளிச்செய்த பாடல்கள்



## பிற்சேர்க்கை

## மற்ற அருளாளர்கள் அருளிச் செய்த பாடல்கள்





திருப்புகழ்ச் சதுரர், அருட்கவி – தவத்திரு

## ஸாது ராம் ஸ்வாமிகள்

ஸ்ரீ பொங்கி மடாலயம், நங்கை நல்லூர், சென்னை – 600 061.



உ
ஸ்ரீ பொங்கி க்ருபா

# பதிப்புரை

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆழ்வார்கள், அருணகிரிநாதர் முதலான அருளாளர்கள் இறைவன் தலங்கட்குச் சென்று, ஸந்நிதிகள் முன் நின்று, ஆசு கவிகளாகப் பாடியவையே தேவாரம், திருவாசகம், திவ்யப்ரபந்தம், திருப்புகழ் முதலான நூல்கள் என்பது வரலாறு.

இக்கூற்றை உறுதி செய்யும் வகையில் 1952 முதல் தெய்வ ஸந்நிதிகளில் கண்மூடி நின்று ராக தாளங்களோடு தங்கு தடை ஏதும் இன்றிப் பல பாடல்களைப் பலவித இலக்கண யாப்புகளில் ஆசு கவிகளாகப் பாடிய பெருமை படைத்தவர் அருட்கவி ஸேதுராமன் என்ற பெயரிலே திகழ்ந்து, துறவறம் ஏற்ற பின் அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் என்ற திருநாமம் தாங்கி வாழ்ந்த அருளாளர் ஆவர்.

அவர் இப்படிப் பாடிய பாக்களுள் மார்கழி மாதத்தில் ஓதப்பெறுவதான ஓர் எம்பாவையும், பதினொன்கு பள்ளி எழுச்சிப் பாடல்களும் அடங்கும். முருகன், அம்பிகை, கருமாரி, ஐயப்பன், ஆஞ்ஜநேயன், அருணகிரியார், வள்ளிமலைத் திருப்புகழ் ஸ்வாமிகள், ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஆகியோர் மீது ஸ்ரீ ஸ்வாமிகள் பாடியுள்ளார்கள்.

மார்கழி மாதப் பாராயணத்தில் பற்றுக் கொண்டவரும், தன் குருநாதராம் வள்ளிமலை ஸ்வாமிகளுக்கு நீண்ட காலம் அணுக்கத் தொண்டு செய்து மகிழ்ந்து, திருப்புகழ் ஞானம் பெற்று, சிறக்கப் பாடித் *திருப்புகழ் இன்னிசைக் குயில்* என அழைக்கப்பட்டவரும், என் தமக்கையுமான திருமதி. பர்வதவல்லி ஸுப்ரம்மண்யம் அவர்கள் அருட்கவி ஸ்வாமிகள் பாடிய பாவை, பள்ளி எழுச்சிப் பாடல்களை இசைக்க ஏற்றதாக ஒரே நூலாகத் தொகுத்து வெளியிட ஆவல் கொண்டு, இயன்ற அளவிற்குப் பொருள் உதவி செய்து, இந்நூல் வெளியிடும் முயற்சிக்குத் தூண்டுகோலாய் நின்றார்கள். ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளின் ஜீவித காலத்தில் இயலாது நின்ற இம்முயற்சி ஸ்வாமிகளின்

ஸித்திக்குப் பின்பாவது விரைவில் நிறைவேறியதற்குத் தமக்கையாரே காரணம்.

*அருட்புகழ்ப்* பாடல்களோடு மாணிக்க வாசகர், தொண்டரடிப்பொடி ஆழ்வார், ஆண்டாள் இன்ன பிற அருளாளர்கள் அருளிச் செய்த பாடல்களையும் ஒருசேர இசைக்க அன்பர்களுக்கு வசதியாக இருப்பதற்கான் வேண்டி அவர்களது பாடல்களும் பிற்சேர்க்கையாக இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

தமிழ் மற்றும் வடமொழிகளில் வெளிவந்து என் கவனத்தை ஈர்த்துள்ள இவ்வகை நூல்களுள், இப்பதிப்பில் அச்சேறுதவற்றின் பட்டியல் ஒன்று பக்கம் 60 -இல் காணக் கிடைக்கும்.

இவ்வாண்டின் பொங்கி மடாலய ஆறு நாள் அருள்விழாவின் இறுதியில், ஸாதுராம் ஸ்வாமிகளின் நினைவு நாள் விழாவான 11.12.2000 அன்று, இந்நூல் தெய்வத் தமிழ் மணம் நுகர்ந்து பாரம்பர்யம் போற்றத் துடிக்கும் அன்பர்தம் கைகளை அடைகின்றது.

மிகக் குறுகிய காலத்தில் கணினியில் பாடல்களை ஏற்றுவது முதல் அனைத்துப் பணிகளுக்கும் உதவி, சிறந்த முறையில் இந்த *மார்கழிப் பாராயணத் திரட்டு* நூலை உருவாக்கித் தந்த என் உழுவலன்பர் ஸ்ரீ ஆர்.ஸ்ரீதரன் அவர்கட்கு என் மனமார்ந்த நன்றி. அவருடைய தெய்வப் பணி தொடர்ந்து நடைபெறக் குமரகுருபரன் திருவருள் கூட்டவேண்டும் என்று அவன் குரைகழலைக் கும்பிட்டு வழுத்துகின்றேன்.

இந் நூலைப் பெற்றுப் பயன்படுத்தும் அன்பர்கள் அருள்நலம் பெருகி வாழ, குருவருளும் திருவருளும் துணை நிற்பதாக. ஸாதுராம் ஸ்வாமிகளின் அருட்புகழ்ப் பாடல் தொகுப்பு நூல்கள் இதுபோல் இன்னும் பல வெளிவர ஆதரவு நாடும்,

*நங்கைநல்லூர்* — *ஸு.வே.ஸுப்ரம்மண்யன்*

*சென்னை - 61* — (பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்)

21.11.2000 — பதிப்பாசிரியர்.

உ

# ஸ்ரீ கணேச ப்ராத: ஸ்மரணம்



(ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் தமிழில் விநாயகருக்குப் பள்ளி எழுச்சி எதுவும் பாடவில்லை. ஆதலால் தொடக்கத்தில் விநாயகரின் "காலை நினைப்பு" வேண்டும் என்ற ஸம்ப்ரதாயப்படி, இப்பழைய ச்லோகங்கள் இங்குச் சேர்க்கப்பெற்றன).

ப்ராத: ஸ்மராமி கணநாதம் அநாத பந்தும்
ஸிந்தூர பூர்ண பரிஶோபித கண்ட யுக்மம் |
உத்தண்ட விக்ந பரிகண்டந சண்ட தண்டம்
ஆகண்ட லாதி ஸுரநாயக ப்ருந்த வந்த்யம் || 1

ப்ராதர் நமாமி சதுராநந வந்த்ய மாநம்
இச்சாநு கூலம் அகிலம்ச வரம் ததாநம் |
தம்துந்திலம் த்விர ஸநாதிப யக்ஞ ஸூத்ரம்
புத்ரம் விலாஸ சதுரம் ஶிவயோ: ஶிவாய || 2

ப்ராதர் பஜாம் யபயதம் நிஜ பக்த ஶோக
தாவாநலம் ஸுரவரம் வர குஞ்ஜ ராஸ்யம் |
அக்ஞாந காநந விநாஶந ஹவ்ய வாஹம்
உத்ஸாஹ வர்தநம் அஹம் ஸுதம் ஈஶ்வரஸ்ய || 3

ஶ்லோக த்ரயம் இதம் புண்யம் ய: படேத் ப்ரயத: புமாந்
ப்ராதர் உத்தாய ஸததம் ஸ ஸாம்ராஜ்யம் அவாப்நுயாத் || 4

## ஸ்ரீ வல்லீகிரி வாஸ கணேச ஸுப்ரபாதம்*



ஆவி: ப்ரமோதம் உலபாசல ஶ்ருங்க வாஸிந்
ஆவிஷ் க்ருதாத்ம மஹிமாகர ஶர்வ ஸூநோ
வைவஶ்ய நாஶந நிஜாங்க்ரி ஜுஷாம் அஜஸ்ரம்
ஸ்ரீவிக்ந ராஜ பகவம்ஸ்தவ ஸுப்ர பாதம் ||

(*ரிஷிகேசம் சிவாநந்தாச்ரமவாஸி, தேவபாஷா கவிபாஸ்கர ஸ்ரீ ஞாநாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகளால் இயற்றப் பெற்ற ஸ்ரீவல்லீ கிரிவாஸ ஸ்ரீ ஸுப்ரம்மண்ய ஸுப்ரபாதத்தில் இது உள்ளது).

# ஸ்ரீ திருத்தணிகேசன் திருப்பள்ளி எழுச்சி

(02-01-1955 அன்று திருத்தணிகேசன் ஸந்நிதியில் மலைமேல் அருளப் பெற்றது)

(கட்டளைக் கலித்துறை)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி



ஒன்று பலவாய் ஒடுங்கி விரிந்துள் ஒளிர்பொருளே
குன்றுதொ றுடு குகனே குமர குருபரனே
சென்று பலபேர் அடியார் புடைசூழ் *திருத்தணி*வாழ் 1
என்றும் இளையவ னேதிருப் பள்ளி எழுந்தருளே. 1.

பத்துப் படைத்த தலையான் பணிந்திடும் பார்வதிபால்
பித்துப் பிடித்த பெருமான் பரமன் பெறும்பிள்ளையே*
செத்துக் கிடக்கஎன் சித்தத்தைச் செய்யும் *திருத்தணி*யோய் 2
எத்துக் குறக்கம்இன் னம்திருப் பள்ளி எழுந்தருளே. 2.

(* பெரும்பிள்ளையே எனினும் ஆம்)

நூறு சதகோடி சூரியர் நேரிய நோக்கொளியாய்
ஆறு படைவீ டுடையாய் அயில்வேல் அரசுடையாய்
மாறு படும்அசுர் நூறு படமுனர் மாய்த்தவனே 3
ஏறு புரைநடை யாய்திருப் பள்ளி எழுந்தருளே. 3.

ஆயிர மாதலை மாசுணம் ஆர்த்த அரைப்பரமன்
பேயிர வாடு பெருந்தகை பேர்புகழ் பேசிஅதைப்
பாயிர தேவாரப் பாஎனப் பாடிய பண்மொழியாய்! 4
ஈயிர** வாவகை நீதிருப் பள்ளி எழுந்தருளே. 4.

(** ஈஇற வாவகை எனினும் ஆம்)

பத்தா யிரக்கணக் கிற்கவி பாடிப் பணிந்திடினும்
சத்தான வற்றைத்தான் தேர்ந்தெடுத் துச்செந் தமிழ்க்குருரும்

மாதவர் மாதவம் செய்தளம் *வள்ளி* 23
*மலைமுரு கள்!*பள்ளி எழுந்தரு ளாயே! 3.

பருவுடல் நுண்ணுடல் காரண உடலாய்
பகர்ஒரு மூவுடற் பகுதியெல் லாம்உன்
திருவுடற் பேர்உருச் சிறுதொகு திகளாத்
திப்பிய ஞானக்கண் ணுற்கண்ட சூரன்
கருவுடற் கூறிடக் கநகவேல் எறிந்தோய்!
காகமுன் கரைந்தது கோழிகூ விற்று
மருவுநி வாநதி மேற்கரை *வள்ளி* 24
*மலைமுரு கள்!*பள்ளி எழுந்தரு ளாயே! 4.

பலிகொண்ட வெண்டலைக் கைப்பரன் குருவே!
பார்வதி அணையுமைந் தா!பரம் பொருளே!
ஒலிகண்ட திருப்புகழ் பூதிஅந் தாதி
உயர்திரு வகுப்பலங் காரம்ஓ தருணைப்
புலிகொண்டல் எனத்தமிழ் சொரிகிரிக் குகைக்குட்
பொலிகுடை வரைத்தளிப் புகுந்துறை குகனே!
மலிதொண்டை நாட்டிற்சிற் றூர்ப்புற *வள்ளி* 25
*மலைமுரு கள்!*பள்ளி எழுந்தரு ளாயே! 5.

புடவியின் மிசைப்படர் புற்பனி நீங்கப்
பூங்குயில் கூவிற்று; புலர்ந்தது பொழுது
திடவிய நெஞ்சுடை அடியவர் திரளாய்த்
திருப்புகழ் பாடிநிற் சேவிக்க நின்றார்
அடவியில் வள்ளியங் கொடிபடர் பொழில்கள்
அடர்திரு மாற்கிரி வேள்விவெற் பன்றி
வடபழ முதிர்பொழில் மலைஎனும் *வள்ளி* 26
*மலைமுரு கள்!*பள்ளி எழுந்தரு ளாயே! 6.

முழங்கின சங்கங்கள் முண்டகம் மலர்ந்து
முனைந்தருக் கனைவர வேற்றிடல் கண்டாய்!
கிழங்கொடு செந்தினை மாகனி வகைகள்
கிடைக்கருங் கொம்புத்தேன் கொணர்ந்துன்சம் பந்திப்

பழங்குடி மக்களாம் புளிநர்கள் சமயம்
பார்த்துமுன் காத்துளர் பரிசிலை படைக்க
வழங்குமேற் பாடியின் மருங்குள *வள்ளி* 27
*மலைமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 7.

வனேவிலேக் காட்டிமுன் மைதிலி மானே
மணந்தவன் மலர்மகட் புணர்ந்தவன் மருகா!
வனேவிலே வனந்தினே மலிந்தகி ரீடை
மலையில்முன் வேடனும் வேங்கையந் தருவாய்
வனேவிலே வளர்பொழிற் புனத்திதண் மிசைவாழ்
வள்ளிபாற் கிழவனுய்க் கிறிமொழி பேசி
வனேவிலே பகர்செட்டி யாய்நிற்கும் *வள்ளி* 28
*மலைமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 8.

வெள்ளியங் கிரிஉறை விமலன்மெய்ப் புதல்வா!
வேதங்கள் ஓதினர் வேதியர் எல்லாம்
வள்ளியங் கிரியுக மலர்மிசை வீழ்ந்து
மகிழ்ந்துகை கூப்பிமுன் வணங்கிய மயலோய்!
புள்ளியங் கிரிதலில் பொலிஎழிற் றேகைப்
புரவியின் மிசைஇளங் கதிர்என மிளிர்வோய்!
வள்ளியங் கிரிமண மலைஎனும் *வள்ளி* 29
*மலைமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 9.

வெள்ளியைக் கொம்பட்டு வேங்கைய தாய்முன்
மேற்படர் தரக்கொடு கொழுகொம்பும் ஆனுய்!
கள்ளியை கூந்தல்அக் காதலி பொருட்டே
காவல்செய் தனேதினே கானகம் திரிந்தே
தெள்ளியைக் கூவிமுன் தினேப்புனச் சாரல்
திரிந்தவண் கனேகளிற் றிருமுழுக் காடும்
வள்ளியைக் காந்தர்வ மணங்கொளும் *வள்ளி* 30
*மலைமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 10.

(ஸ்ரீ வள்ளிமலே முருகப் பெருமான் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# பெங்களூர்ப் பநஸபுரி (அல்ஸூர்) முருகன் திருப்பள்ளி எழுச்சி

(22-4-1975 -அன்று அருளப் பெற்றது)

('த'கர வர்க்கப் பாமாலை - எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

தருமமும் அர்த்தமும் காமமும் மோக்ஷ
　சதுர்புரு ஷார்த்தமும் தந்தருள் குஹனே!
கருமமும் பக்தியும் யோகமும் ஞாநக்
　கநநெறி நான்கிலும் கருதும்உன் அன்பர்
மருமமும் நாவுறு வாக்கொடு தலையும்
　மன்னிய கண்ணிய புண்ணிய வடிவே!
பருமரம் பலஉள *பெங்களூர்ப் பநஸப்* 31
　*பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 1.

தாதர்கள் பன்மொழி யாளர்கள் கலந்து
　தமிழ்வட மொழிகரு நாடகம் விரவக்
காதலிற் கனிந்துகண் ணீர்உகுத் தன்புக்
　கசிவொடு துத்தியம் பலசொலித் தொழுதார்
ஆதவன் கீழ்த்திசை அணுகினன் அருணன்
　அங்கதிர் ஒளிபரப் பிடமுதல் உதித்தான்
பாதபம் பயில்பொழிற் *பெங்களூர்ப் பநஸப்* 32
　*பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 2.

திநகர கோடியர் எழுந்தனர் போலத்
　திகழும்செவ் வேற்படை திருக்கரத் தேந்திக்
கநகர தலம்பதி னொன்றிலும் உருத்ர
　கணர்பதி னொருவரைப் படைகளாக் காட்டி
மநகர குகைஇவ் வுல(கு)எங்கும் உள்ள
　மதிக்கரும் சிநகரம் தோறும்வாழ் பவனே!
தநகரன் தொழு(து)எழும் *பெங்களூர்ப் பநஸத்* 33
　*தலைமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 3.

தீகனும் தெரிகிலன் திவாகரன் எழுந்தான்
செங்கயற் பைங்கயப் பங்கயம் அலர
நாகனம் புள்ளினம் நாரைகள் முதல
நல்லிரை தேடுவான் கிளம்பின வெளிக்கே
காகமும் கரைந்தது சேவல்கொக் கறுகோக்
காகள வாத்தியம் ஊதிற்று கண்டாய்!
பாகன மொழியர்சூழ் *பெங்களூர்ப் பதலைப்* 34
*பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 4.

துறையென நினைஅழை தொண்டர்கு ழாங்கள்
கடுபுனல் விலக்கித்தண் ணீர்நனி மூழ்கி
அரைதனிற் பட்டணிந் தரியவெண் பொடியை
அவரவர் நெற்றிக்(கு)இட்(டு) ஆலய வாயில்
வரைவந்து நின்றவர் வாசலிற் கதவம்
வழிவிட வேண்டிக்காத் துள்ளனர் முறையே
பரைதரு பாலக! *பெங்களூர்ப் பதலைப்* 35
*பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 5.

தூபமும் தீபமும் சாந்தமும் அகிலும்
தூமலர் மாலையும் துவளும்கைக் கொண்டு
கோபயம் தெங்கிள நீர்கொம்புத் தேன்குங்
குமம்கரும் பின்பிழி வைஅமு தெல்லாம்
நீபரிந் தாடிட ஏந்திநிற் கின்றார்
நிலவொளி உடுவொளி வானிடை மறைந்த
பாபம்உன் முன்பெனப் *பெங்களூர்ப் பதலைப்* 36
*பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 6.

தெய்வயா னையைஒரு புறத்திலும் வள்ளித்
தேவியை மறுபுறம் தன்னிலும் கொண்டு
சைவயா னைப்பொர நாப்பண்நின் றருளும்
ஷண்முக நாதனே! சரவண பவனே!
மைவரும் திருத்தணிச் செங்கல்வ ராய
வடிவத்தை நினைவுறுத் திடமதி எதிர்கொள்
தைவத மே!எழிற் *பெங்களூர்ப் பதலைத்* 37
*தலமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 7.

தேவர்க்கு வைகறைப் பொழுதெனும் மார்க்க
  *சீரிட* மதிஎனும் மார்கழி மாதம்
யாவர்க்கும் திங்களுட் *சிறந்ததென்(று)* இசைப்பார்
  ஏனெனில் நின்னேஅும் மதியில்எல் லோரும்
மூவர்க்கும் முதல்என மொழிந்துகை தொழுது
  முருகலர் தூஉய்ச்சிறு காலைவீழ்ந் திறைஞ்சும்
பாவத்தாற் கொல்!நகர்ப் *பெங்களூர்ப் பநஸைப்* 38
  *பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! **8.**

தைந்நியம் உடையஎன் தாபத்தைத் தீர்த்துச்
  சாபமில் லாஅருட் சாந்திதந் தருளும்
அந்நியம் இல்லதோர் அரும்பரம் பொருளே!
  அயில்மயில் வசரம்மூன் றுடைஅடை யாளா!
கந்நியர் காதலி மார்திரு மாலின்
  காரிகை மார்ஸுர ஸேனைநீல் வள்ளி
பந்நியர் பங்க!பைம் *பெங்களூர்ப் பநஸைப்* 39
  *பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! 9.

தொந்திமி தோம்என நடம்இடும் பரமன்
  ஸுதனும்நீ குருவும்நீ ஸுப்பிர மணிய!
இந்திரன் திசையில்முன் எழுந்துள கதிரோன்
  எந்தைநின் திருவடி காணவும் விரைந்தான்
சந்திரன் போல்உள ஷடுமுகம் உனதைத்
  தரிசித்து வெட்கிய தண்மதி மறைந்தான்
பைந்திரு மருமக! *பெங்களூர்ப் பநஸைப்* 40
  *பதிமுரு கா!*பள்ளி எழுந்தரு ளாயே! **10.**

தோஷமில் மாண்டவ்ய க்ஷேத்திர வாஞு!
  சூரனைக் கோரம்செய் வீர!மெய்த் தீர!
கோஷங்கள் பலவகை குயில்புறு கோழி
  குருகினம் எழுப்பின கும்பிருட் டகல;
வேஷங்கள் வெளிவரல் போல்ஒளி பரப்பி
  வெயிலவன் வந்தனன் வெளிஎலாம் சிவப்ப;

பாஷணம் பால்அன *பெங்களூர்ப் பநஸப்* 41
*பதிமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 11.

"தௌஹித்தி ரா!"என்று மேனைவாய் விண்டு
தழுவிட அழைத்திடும் தவச்செல்வப் பேரா!
கௌஹத்தி முதலிய வடதிசைத் தலத்தும்
கலந்துறை கணபதிக் கிளையகண் மணியே!
நௌஹஸ்த்தி நாபுரப் பாண்டவர் வாழ்க்கை
நடுக்கட லுக்கெனும் நரஹரி மருகா!
பௌஹஸ்த்த! இடை"ருஷ" *பெங்களூர்ப் பநஸப்* 42
*பதிமுரு கா!பள்ளி எழுந்தரு ளாயே!* 12.

(பெங்களூர்ப் பநஸபுரி முருகன் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

*அருட்கவி ஸாதுராம் ஸ்வாமிகள் பெங்களூரில் 1976 -இல் தங்கி இருக்கையில், முதன் முதலாக வேல் மாறல் மன்றத்தினைத் துவக்கி, பூஜைக்கென வடிவமைத்த வேல்மாறல் சக்கரம் கீழே தரப்பட்டுள்ளது.*



வேல் மாறல் சக்ரம்

# சென்னை-வடதிருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி எம்பாவை



(வெண்டளையான் வந்த
இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

**கோயிற் குளம்போய்க் குடைந்தாடும் கோதைமீர்!**
**வேயிற் பொருத்தோள் விளங்கிழையீர்! வாருமின்!நம்**
**தாயிற் சிறந்த தயையாள் *வடமுல்லை***
***வாயிற்* பயின்றருளும் *வைணவி*செந் தாள்மலர்பாற்**
**பேயிற் பிறங்கும் பெரும்பித்துண் பத்தியினுற்**
**சேயிற் பிதற்றுகோம், நீருஞ் செவிமடுத்து**
**வாயிற் கடைதிறந்து வந்தெம்பாற் சேர்தருவீ** 43
**ராயிற் பொருபுனல்புக் காடேலோர் எம்பாவாய்.** 1.

ராகம்: நாட்டை தாளம்: ஆதி

**சீர்கெழுதிண் மார்கழியாம் திங்கள் நிறைதிங்கட்**
**பேர்கெழுநல் நாள்ஈதால்! பேதாய்! பெதும்பைமீர்!**
**நீர்கெழுதண் பேராறும் நீந்திக் குடையுதுமால்;**
**கூர்கெழுசெவ் வேல்மார குற்சிதனைக் குஞ்சரனை**
**ஏர்கெழுசேய் என்றழைக்கும் எங்கள்வட *முல்லைவனத்(து)***
**ஊர்கெழும்அவ் *வைணவி*தாள் ஓதும் உணர்வுடையீர்!**
**ஏர்கெழுமப் பூட்டி எருதுகைத்தார் பல்லுழவர்;** 44
**நீர்கெழும்அந் நித்திரையை நீக்கேலோர் எம்பாவாய்.** 2.

ராகம்: கல்யாணி தாளம்: ஆதி

**துஞ்சிப் பொழுதைச் சுருக்கித் தொலைக்காமே**
**வஞ்சிக் கொடிஇடையாள் *முல்லை வடவாயிற்***

பஞ்சிக்கால் வைணவிமான் பாதம் பணிந்தேத்தி
நஞ்சிக்கல் எல்லாம் நலியக் கலிவினைகள்
அஞ்சிப்போய் ஓடி அழிய வழிகாண்போம்
நெஞ்சிற் குடியாக நித்தம் நிலைநிற்கக்
கொஞ்சிக் குலாவிக் குதுகுலிப்போம் மற்றவளாம் 45
கஞ்சிக்கா மாட்சி கழல்ஏலோர் எம்பாவாய். 3.

ராகம்: ஆரபி தாளம்: ஆதி

புக்கறுகோ ணத்துறையும் பொன்னங் கழல்மன்னன்
அக்கறுகோ டாரணிவார்க்(கு) அன்(று)உபதே சித்தறிஞர்
சிக்கறுகோன் கைக்கொடியாம் செஞ்சூட்டுச் செஞ்சேவல்
கொக்கறுகோ கோஎன்றே கூவிக் குரல்கொடுப்ப
மிக்கருகே காகம் விரைந்து கரைந்துபறந்(து)
இக்கருகே எல்லாம் இரைதேடச் சென்றனகாண்!
மைக்கருகோ மங்காய்! மடந்தாய்! துயில்எழுந்தெம் 46
சக்கருகே முன்காணச் சாரேலோர் எம்பாவாய். 4.

ராகம்: அடாணா தாளம்: ஆதி

சண்டா சுரனைத் தருக்கழித்துத் தாருகனை
முண்டா சுரனை மகிடனைமுன் மொய்த்தடர்த்துப்
பண்டா சுரனைப் பலிகொண்டு மாமனைக்கு
ரண்டா சுரனை ரதிபதியை ராவணனும்
மிண்டா சுரனை விதியைச் சலந்தரன்என்
கண்டா சுரனைக் கடுநமனை அந்தகப்பேர்
அண்டா சுரனைப் புரத்தைஅடர்த் தானைஉயிர் 47
கொண்டானைக் கொண்டாளைக் கூறேலோர் எம்பாவாய். 5.

ராகம்: கானடா தாளம்: ஆதி

சிற்றம் பலத்தான் திருவா திரைக்குரியான்
நற்றம் பலத்திதழ்வாய் நன்னகையான் புன்னகையான்
குற்றம் பலசெயினும் தம்மடியார்க் கோதாட்டிச்
சுற்றம் பலமாத் துணிபவர்போற் சூழ்உறவன்

துற்றம் பலகைஒரு தொண்டரடிக் கீழ்இட்டோர்
அற்றம் பலர்அறிய அன்றொருநால் வர்க்குரைத்து
மற்றம் பலம்நான்கும் வானுடல் செய்தவன்கைப் 48
பற்றம் பலனோ! பறையேலோர் எம்பாவாய். 6.

ராகம்: இந்தோளம் தாளம்: ஆதி

அன்ன பறையே அவுணர் புரம்எரித்தான்
என்ன உரைத்திடுதல் எவ்வா(று) எனில்அவனே
மன்ன அரன்உடலில் வாமத்திற் பார்வதியாப்
பின்னம்இன்றி ஒன்றாகப் பின்னிப் பிறங்குதலால்
சொன்ன வரன்செய் தொழில்களெலாம் சத்திஎனப்
பன்ன இருக்கும் பறையின் செயல்அன்றோ!
இன்ன பறையேமால் என்னும்ஆண் சத்திஎனில் 49
பின்னர் இனிஏது பேச்சேலோர் எம்பாவாய். 7.

ராகம்: மோஹநம் தாளம்: ஆதி

முல்லை வடவாயில் மூர்த்தமுறும் வைணவியை
ஒல்லை வழிபடுவான் எல்லோன் உதித்தனனால்
கொல்லைகள் தோறும் குருகினங்கள் கூடுதுறந்(து)
எல்லைகள் நாற்புறமும் எங்கும் பறந்தனகாண்!
நல்லைநீ நங்காய்!முன் நான்எழுப்பும் நும்மைஎன்ற
சொல்லை மறந்தே துயிலா அணைக்கிடக்க
வல்லைகொல் எல்லோரும் வந்தோம்வந் தியாம்எழுப்பும் 50
தொல்லை உணர்ந்தும் துயிலேல்ஓர் எம்பாவாய். 8.

ராகம்: குந்தலவராளி தாளம்: ஆதி

திகழும் வடபால் திருமுல்லை வாயில்
மகிழும் வயிணவிக்கே வாய்மனம்மெய் ஈந்த
புகழும் படைத்த பொலன்கொடிநீ! போந்துன்
நெகிழும் நிலைஅகலோம் எங்கள்முன் நேர்ந்தால்
இகழுங்கொல் இஞ்ஞாலம் நின்னியல்பும் ஈதோ!
மகிழும் கடம்பும் மலர்க்குரவும் தூவி

நிகழும் அகந்தை அகழும் நெறிப்போய் 51
முகிழும்கை மேற்கொள்ள முந்தேலோர் எம்பாவாய். 9.

ராகம்: தந்யாஸி தாளம்: ஆதி

ஆங்காரம் அற்(று)அறி வாநந்த மெய்பெற்றுள்
ஓங்காரம் உற்(று)என் உணர்வற்(று) உளபற்றும்
ஊங்காரம் நீங்கிவிரைந் தோடி ஒளிந்தொழியப்
பாங்கார அன்பென்னும் பக்தி வலைப்பட்டுத்
தூங்காமல் தூங்கிச் சுகித்திருக்கப் பேரருளுக்(கு)
ஏங்காமல் ஏங்கி எதிர்நோக்கி நிற்குமெனைத்
தாங்காமல் கைவிடுமோ தண்முல்லை வைணவியாம் 52
பூங்காமச் செங்கனிகாற் போதேலோர் எம்பாவாய். 10.

ராகம்: பைரவி தாளம்: ஆதி

மென்றெண்டை வாய்ச்சங் கிலிபரவை மின்கொழுநர்
வன்றெண்டர் என்பார்தாம் மாசில் மணிஇறையைக்
கன்றெண்டு மாப்போலே கண்ணிக் கரைந்துருகி
அன்றெண் டமிழ்செய்(து) அடிபணிந்தார் அத்தகைய
தென்றெண்டை நாட்டுத் *திருமுல்லை வாயிலில்*என்
புன்றெண்டை யும்கொள்ளும் பொற்புமிகும் *வைணவியை*
இன்றெண்டை கொண்டழகாய் இன்னிசையாற் பாடிடுவோம்;
நின்றெண்டை நங்காய்! நிகழ்த்தேலோர் எம்பாவாய். 11.

ராகம்: பியாகடை (பேகடா) தாளம்: ஆதி

வாழும் *வடமுல்லை வாயில் வயிணவிபால்*
ஆழும் தவமுடையார் அன்பைப் புரைகடல்கள்
ஏழும் குடித்தவள்போல் மேனி இருண்டவள்கால்
சூழும் *சிலம்பிற்* சுழுறித் தொனித்திடித்துத்
தாழும் குழைஇணைபோல் மின்னித் தவழ்ந்தடர்பைங்
கூழும் தழைப்பக் குவலயம்எல் லாம்வாழ
வீழும் துளிகள்அவள் மெய்க்கருணை போல்மேலும் 54
கீழும் குளிரமழை கீழ்த்தேலோர் எம்பாவாய். 12.

ராகம்: சாமா தாளம்: ஆதி

ஆதி அரிஅயனும் அண்ணு அடிமுடிகொள்
சோதி உருமுழுதும் தோற்றம்நடு ஈறனைத்தும்
பாதி வடிவு பகுத்தறிந்த மெய்த்தவத்தி
சாதி குலங்கடந்த தத்துவத்தி சத்துவத்தி
போதிருவோர் வாழ்விழிச்சி பூதியணி புண்டரத்தி
மாதிமைசேர் மாதிமையோர் வந்தவட முல்லைவனம்
நீதிபுரி வைணவியாம் நின்மலிம ஞேன்மனியை 67
ஓதிஉரு காதிற்பார்க் (கு)உய்வேலோர் எம்பாவாய். 25.

ராகம்: உசேநி தாளம்: ஆதி

செங்கையுள் ஒன்றில் ஜெபமாலை செங்கழுநீர்
அங்கைமற் றொன்றில் அபயம் வரதம்உறக்
கொங்கைக் கனியைக் குறிநோக்கு மாப்போலே
தங்கக் கிளிஒன்று தாங்கிச் சடைமுடித்த
செங்கட் பரம சிவயோக மூர்த்தியாம்
லிங்கத் திருத்தாலி லிங்கித்த வெண்கழுத்தின்
மங்கைத் தவத்திவட முல்லைவன வைணவிமா 68
நங்கைக் கடித்தொழும்பர் நாம்ஏல்ஓர் எம்பாவாய். 26.

ராகம்: யதுகுலகாம்போதி தாளம்: ஆதி

சங்கும் சுதரிசனச் சக்கரமும் தண்டுமடல்
பொங்கும் வசியும் பொருசிலையும் ஐம்படையாத்
தங்கும் கரத்தழகி சங்கரிதன் தங்கைமலர்க்
கொங்குண் குழற்கொடிமால் கூறுன நாரணிமற்
றெங்கும் பரந்தவள் என்பதனுல் வைணவிஎன்
றங்குங் குமமேனி யாள்அவளை யாமழைப்போம்
தெங்கும் கமுகும் திரள்திரளாய்'ய்ச் சேர்ந்து 69
வங்குந்தண் முல்லை வனத்தேலோர் எம்பாவாய். 27.

ராகம்: நாதநாமக்ரியா  தாளம்: ஆதி

**அன்பே உருவமாய் ஆநந்தக் கண்ணீர்வார்த்(து)**
**இன்பேயும் நன் *முல்லை வாயில்* இலக்குமிஉன்**
**றன்பேரும் ஊருமே சாற்றிப் பிதற்றுகோம்**
**வன்பேயும் அஞ்சவரு *வைஷ்ணவியோ* வைஷ்ணவியென்(று)**
**என்பே உருக இதயம் இளகிநெகிழ்ந்(து)**
**என்பேதம் நான்பேதம் எல்லாம் கடந்தொழிந்து**
**துன்பே இலாத சுகவாரி மூழ்குதற்குன்** 70
**முன்பே ஒருங்குவந்தோம் மொய்த்தேலோர் எம்பாவாய்.** 28.

ராகம்: மலயமாருதம்  தாளம்: ஆதி

**வண்டார் வயல்சூழ் *வடமுல்லை வாயில்*வளர்**
**வண்டார் கருங்குழல்பூண் வண்டார் *வைஷ்ணவியே!***
**கண்டார்தம் கண்ணும் கருத்தும் கவரும்உனை**
**விண்டார் வினைவிண்டார் விள்ளாதார் வீடண்டார்**
**கண்டார் சொலி!உன்னைக் காணுதார் பேணுதார்**
**உண்டார் உடுத்தார் இருந்தார் உறங்கினரால்**
**கொண்டார்வம் மிக்கூரக் கும்பிட்டார் தாம்இனிமேல்** 71
**மண்டார் பிறவி மலத்தேலோர் எம்பாவாய்.** 29.

ராகம்: மத்யமாவதி  தாளம்: ஆதி

**வாழிஉன் வான்கருணை போற்றிஉன் மான்விழிகள்**
**வாழிஉன் மந்திரங்கள் போற்றிஉன் வண்கரங்கள்**
**வாழிஉன் வண்டமிழ்கள் போற்றிஉன் வார்கழல்கள்**
**வாழிஉன் மாணடியார் போற்றிஉன் மாமகிணர்**
**வாழிஉன் மன்பதைகள் போற்றிஉன் மண்டலங்கள்**
**வாழிஉன் *வைஷ்ணவி*ப்பேர் போற்றிஉன் மங்கலச்சீர்**
**வாழிஉன் *முல்லை வடவாயில்* வாழ்கோயில்** 72
**வாழியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்.** 30.

(ஸ்ரீ வைஷ்ணவி எம்பாவை முற்றும்)

# சென்னை-வடதிருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி தேவி திருப்பள்ளி எழுச்சி

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம்  தாளம்: ஆதி

**இதயசெந் தாமரை நாயகன் ஆன**
**எழுகடர் வீசுமெய் யறிவெனும் கதிரோன்**
**உதயமும் செய்தனன்; உணர்வெனும் அருணன்**
**உதிக்கவும் ஒழிந்ததஞ் ஞானமாம் இருளும்;**
**சதயம் முதலான உடுக்கணம் என்ன**
**ஸமய விகற்பம்எல் லாம்மறைந் தன;மா**
**மதயம சிபுவளர் *வடமுல்லை வாயில்*** 73
***வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 1.

**கோழிய தாம்உன்றன் குமரன்கைக் கொடியும்**
**கொடிகளும் கூவிக் கரைந்தன முறையே;**
**மேழி பிடித்தனர் உழவர்கள் எல்லாம்;**
**வேதியர் வீதியில் ஓதினர் வேதம்;**
**தோழியர் பூம்புனல் ஆடிப் புதுப்பூந்**
**துகில்உடுத்(து) அகில்எடுத்(து) எதிரில்நிற் கின்றார்**
**வாழிஎன் றன்பர்சொல் *வடமுல்லை வாயில்*** 74
***வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 2.

**விட்டுறு கைப்படை யாம்திருச் சங்கம்**
**வேய்ங்குழல் பேரிகை மேளம்கைத் தாளம்**
**கொட்டுறும் மத்தளி கைத்துடி காளம்**
**கொக்கரை யாதிய மிக்கன கோஷம்;**
**ஜிட்டுறு மால்அயன் மற்றுள தேவர்**
**ஜீவன்முக் தர்பலர் ஸேவித்து நின்றார்;**

மட்டுனும் மலர்ப்பொழில் *வடமுல்லை வாயில்* 75
*வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 3.

வாணியும் செந்திரு மாதொடு ரதியும்
மற்றறி ராணியும் மங்கையர் பிறரும்
பாணியிற் பன்மலர் ஏந்திய வண்ணம்
பற்பரா சக்திலை ஆடியும் பகவும்
பேணிய பங்கய சங்கமா நிதியும்
பின்னுமுற் காட்டுவான் முன்வந்து நின்றார்;
மாணிமை ஆண்டவர் *வடமுல்லை வாயில்* 76
*வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 4.

குயில்இனம் கூவின; குளிர்பொழில் தோறும்
குருகுகள் ஆர்த்தன; சிறகடித்(து) அன்னம்
வெயில்இளங் கதிர்முனம் எழுந்தது; வலியன்
வெள்ளி முளைத்து வியாழம் உறங்கப்
பயில்இசை பாடிற்று; பாணர்பா வாணர்
பண்ணவர் முநிவரர் மண்ணவர் பணிந்தார்;
மயில்இய லார்தொழும் *வடமுல்லை வாயில்* 77
*வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 5.

ஆதவர் பன்னிரு பேர்எண் வஸுக்கள்
அச்விநி தேவர் பதினொரு ஜடையர்
போதமுப் பத்துமுக் கோடியாம் தேவர்
புண்ணியர் கின்னரர் கருடர்கிம் புருடர்
வேதவி யாஸர் அகத்தியர் முதலா
மேதகை யோர்கண நாதரும் வந்தார்;
மாதவர் வாழ்திரு *வடமுல்லை வாயில்* 78
*வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 6.

சாரணர் ஸித்தர்வித் சாதரர் இயக்கர்
சந்திரர் இந்திரர் மருதர்கந் தருவர்
நாரதர் தும்புரு எண்டிசைப் பாலர்
நாகர்மெய்ஞ் ஞாநியர் மோநியர் யோகர்

மாரதர் வைரியர் மாகதர் சூதர்
  மங்கல பாடகர் கட்டியக் காரர்
வாரமாய் ஏத்தினர் *வடமுல்லை வாயில்* 79
  *வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 7.

என்னையும் இவ்வுல(கு) ஏழிரண் டினையும்
  ஈன்றெடுத்(து) என்றும் இரட்சணை புரியும்
அன்னைநீ துயிலுதி ஆகில்மற் றுரே
  அவனியில் எழுந்து தொழிற்படு வார்உன்
தன்னையே மன்னுயிர் யாவையும் நம்பித்
  தாழ்த்தித் தலைவைகி வாழ்த்தின; சேவின்
மன்னே அணைந்தருள் *வடமுல்லை வாயில்* 80
  *வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 8.

பாடின வண்டினம் பங்கயம் மலரப்
  பண்ணிவெள் ளாம்பல்போய்க் கூம்பின ஆம்பல்;
ஆடினர் நாட்டியம் ஊர்வசி மேனே
  அரம்பை திலோத்தமை ஆதியர் எல்லாம்;
கூடினர் மாநவ சக்திகள் ஒருபால்;
  குழுமிநின் றுர்ஸப்த மாதர்கள் ஒருபால்;
மாடினம் மேய்வன *வடமுல்லை வாயில்* 81
  *வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 9.

பால குஹன்விளை யாடையில் ஓடிப்
  பாடுதல் கண்டு பிடிக்கச்சென் றேடிக்
காலது நொந்து களைத்தனே யோ?முன்
  கண்டபண் டசண்ட முண்டரைக் கொல்வான்
சூலம தேந்திப்போர் செய்தமை யாலோ?
  துயிலுறும் காரணம் ஏதாகு மேனும்
வால வடிவிநீ! *வடமுல்லை வாயில்* 82
  *வைஷ்ணவி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 10.

(ஸ்ரீ வைஷ்ணவி திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# தேவி திருப்பள்ளி எழுச்சி

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி



பல்லோர் பரவப் படுபவளே!
பார்சு ரேழும் பயந்தவளே!
புல்லோ நுனியிற் பனிஒழிந்த;
புனிற்று கற்று மேய்ந்த;மனக்
கல்லோ சிறிதும் கரைந்துருகாக்
கடையேன் காணக் கனைகடல்மேல்
எல்லோன் உதயம் செய்தனன்காண்!
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 1.

பல்லா யிரத்தாண் டெனமுநிவோர்
பல்லாண் டிசைக்கப் பழஅடியார்
சொல்லா நின்ற தோத்திரத்தின்
சுவையான் மயங்கித் துயிலுதியோ!
கல்லா மனமும் கசிந்தொழுகக்
கருணைக் கடலாய்க் காட்சியளித்(து)
எல்லா உயிரும் இன்புறவே 84
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 2.

மாட்டுக் கழுத்தின் மணிஒலியும்
மத்திற் கடையும் தயிர்ஒலியும்
கோட்டுக் குயில்கூங் கூவொலியும்
கோழிப் பறல்செய் கூக்குரலும்
கூட்டுக் கொடியின் கரைஒலியும்
கோட்டுத் தொனியும் கேட்டிலையோ!
ஏட்டுக் கடங்கா இரும்புகழ்சேர் 85
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 3.

உமையாள் உணர்வாய் உடலுயிராய்
உருவாய் அருவாய் அருவுருவாய்

அமையா எமையாள் அரசினனு
அடியார் முநிவர் குழாம்துதிக்கும்
ரமையே! திருவில் தநுஅழகில்
ரதியே! அறிவிற் கலைமகளே!
இமையோர் முடிக்குன் அடிஈவான் 86
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 4.

அன்றுன் அடிகட்(கு) அடிமைஎனு
எழுத்துப் பட்ட அதுமுதலே
ஒன்றும் அறியேன் எனதொழில்கள்
உனதே; ஒன்றும் அஞ்ஞானத்(து)
என்றும் துயிலும் எனைப்பள்ளி
எழுப்பி ஞான இன்புதர
இன்றுன் கருணைக் கடைக்கண்விழித்(து) 87
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 5.

வெள்ளே றிவரும் விமலனொடும்
வெவ்வேற் செவ்வேள் குமரனொடும்
உள்ளே புகுந்தென் உளம்கரைத்திவ்
வூனை உருக்கி ஒளிபெருக்கிக்
கள்ளே கமழும் கமலமலர்க்
காலிற் சேர்த்துக் கடைக்கணிப்பாய்!
எள்ளேல் எனைஓர் துயில்முகன்என்(று) 88
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 6.

உள்ளம் கவர்ந்(து)என் உடைமையெலாம்
ஒருங்கே கொண்டாய் உடையவளே!
கள்ளம் தவிர்ந்துன் கழலிணையே
கருதும் திருநாள் உண்டுகொலோ!
பள்ளம் கடைபோம் பரங்கருணை
வெள்ளம் படியும் பரிசுண்டோ?
எள்ளம் பூநா சியின்எழிலார் 89
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! 7.

பரவும் சுரர்தம் கணம்ஒருபால்
பணியும் நரர்தம் குழுஒருபால்
விரவும் நவசத் திகள்ஒருபால்
வேதம் பயில்பூ சுரர்ஒருபால்
வரவும் போக்கும் இலாதமகா
வநிதா மணியே! எனஇசைத்தார்
இரவும் பகலும் இலாதவளே! 90
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! **8.**

மக்கள் எழுப்பத் தாய்துயிலும்
வழக்கம் இன்றே கண்டேன்நான்
தக்க தன்று ஜகமேழும்
பயந்த தாய்நின் றனக்கிதுதான்!
மெய்க்கண் ணுதற்குப் பணிவிடைகள்
மிகமுன் னிரவில் விழித்திளைத்தோ
எய்க்கக் களைத்துத் துயிலுதிநீ! 91
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! **9.**

மருளும் குதலை மதலைசொலும்
மழலை மொழிகேட் டேனும்எழுந்(து)
அருளும் திருவுள் ளமதிலையோ!
அம்மே! துயிலாத் துயில்பயிலும்
பொருளும் புரியப் புகலுதிஎப்
போதும் துயிலாப் பரம்பொருளே!
இருள்போய்ப் பொழுது புலர்ந்ததுகாண்! 92
எந்தாய்! பள்ளி எழுந்தருளே! **10.**

(தேவி திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# சென்னை-திருவேற்காட்டு



# ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் திருப்பள்ளி எழுச்சி

(25-7-1967 -அன்று அருளிச் செய்தது)
(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம்  தாளம்: ஆதி

**கோழியும் கூவிற்று குளிர்தரு காலை**
**'கொக்கறு கோ'எனக் குவலயம் விழிப்பப்**
**பாழியங் குரல்ஒலி காட்டிஎங் கெங்கும்**
**பயிலிசை பாடின குயிலினம் பொழிலில்;**
**'வாழிய வாழிய வாழி'என் றன்பர்**
**மங்கல வாசகம் வாய்தலில் உரைத்தார்**
**காழியல் மனத்தவர் கருதும்*வேற் காட்டுக்*** 93
***கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 1.

**கடலொலி கொல்லென அடியவர் கூட்டம்**
**கணங்கண மாய்வந்து துதிபல மொழியில்**
**உடலிடை உறுதிஉள் ளளவும்ஓ தினரால்**
**ஒளிபெற அருக்கனும் உதயமும் செய்தான்**
**அடலுடை துடிப்படை சூலம் கபாலம்**
**அரிநெடு வாள்அர வாதிய ஏந்தும்**
**கடவுளர் தலைவியே! *கழனிவேற் காட்டுக்*** 94
***கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 2.

**காலையும் ஆயிற்று கன்னியர் எல்லாம்**
**காரிய மாய்ப்புறம் போந்தனர் களிப்பாய்**
**வேலையில் மிக்குழை உழவர்கள் குழுவும்**
**மேழியும் கையுமாய் வெளிப்புறப் பட்டார்**
**மாலையில் வந்தவர் காலைக்காட் சிக்கா**
**மாதவம் கிடக்குந ராய்முனர் நின்றார்**

காலையும் காட்டிஆட் கொள்ளவேற் *காட்டுக்* 95
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 3.

கிளிகளும் கூட்டினின் றெழுந்துபோய் வெளியிற்
கீச்சிடல் இன்னும்நீ கேட்டிலை கொல்லோ!
அளிகளும் 'ஒய்'யென அறைவன மலர்மேல்
அம்புயம் தடந்தொறும் அலர்தர அழகாய்
விளிகொளும் மெய்யடி யார்திருக் கூட்டம்
விதவித மாய்வந்து காத்திருப் பனகாண்!
களிகொளும் முகத்தினைக் காட்டவேற் *காட்டுக்* 96
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 4.

'கீச்சுக்கீச்(சு)' என்றெங்கும் வலியனும் கூவக்
கேட்டிலை யோ!அருள் காட்டிலை யோ!ஓர்
பேச்சுமூச் சின்றியே பார்எலாம் உறங்கிப்
பிரளயம் சிருட்டிபோல் உயிர்ப்(பு)உறும் பொழுதும்
ஆச்சுநின் வாச்சியம் ஆரம்பம் ஆக
அலைகடல் ஒலியென ஆலயத் துறுமால்
காய்ச்சுநின் கனிதரு பொழில்கொள்வேற் *காட்டுக்* 97
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 5.

குணதிசை அருணனின் வரவினுல் மலர்ந்த
கோகந கம்பொரும் திருமுகத் தவளே!
மணமலி முல்லைவெண் மல்லிகை மாலை
வகைவகை யாய்ப்புனை மாதினி யாளே!
இணர்மிசை அறுகின்நல் நுனிமிசை இருந்த
இளம்பனி இருப்பிடம் ஏதெனு மாவான்
கணம்உடு மறைந்தது! காண்டி!வேற் *காட்டுக்* 98
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 6.

கூடினர் தேவர்கள் கூட்டமாய் ஒருபால்
கும்பிடும் கொள்கையர் மானுடர் ஒருபால்
நீடினர் அரம்பையர் நித்திலை மாதர்
நீள்பெருங் குழுக்களில் நின்றனர் ஒருபால்

பாடின வீணையர் பக்தர்கள் ஒருபால்
பாணியில் ஆடியர் நிதியினர் ஒருபால்
காடின மாய்எங்கும் கலந்தவேற் காட்டுக் 99
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 7.

கெதிபெற வேண்டியே மனிதர்கள் பல்லோர்
கிழமைகள் வழுவறக் கேண்மையில் நாடி
நிதிபெற வும்பவ நிசிஅற வும்தாம்
நினைப்பன நடப்பவும் நெறிமுறை மாறு
மதிபெற வும்வந்து வந்துகும் பிடும்தாய்!
மாயைகள் செய்மக மாயைஉன் னருளால்
கதிபெறக் காத்துளோம் கருதிவேற் காட்டுக் 100
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 8.

கேட்டதும் வரம்அவை கிடைக்கும்நல் இடமாக்
கெழுமியே மனத்தெணிக் குழுமியே வருவார்
நாட்டவர் அவர்க்கெலாம் நல்லருள் புரியும்
நாயகி யே!பிறை தோய்அகி சூடீ!
ஊட்டவல் கன்றினம் தாய்மடி முட்டி
உயரச்சென் றிழியுமா றுணர்த்தின கண்டாய்!
காட்டடர் தொண்டைநன் னூட்டுவேற் காட்டுக் 101
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 9.

கொடைபல வாச்செயும் குறிக்கரத் தாளே!
கோயிலும் மற்றதன் வாயிலும் பெரிதாய்
உடையவ ளே!எனை உடையவ ளே!ஏன்
உறங்குகின் றுய்இன்னும்? உலகன்னை நீயே!
விடையவர் சடையவர், மூர்க்கர்முன் தொழுத
வேதபு ரீசுரர் வேற்கண்ணி பால்வாழ்
கடைபல வாய்ப்பெரி தாயவேற் காட்டுக் 102
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 10.

(ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# சென்னை-திருவேற்காட்டு ஸ்ரீ யோக கருமாரி அம்மை திருப்பள்ளி எழுச்சி

(26-5-1987 -அன்று அருளப் பெற்றது)

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பௌளி    தாளம்: ஆதி

**ஸூரியன் உதித்தனன் அருணன்முன் தோன்ற**
**ஜோதியங் கதிர்க்கரம் ஆயிரம் பரப்பி**
**ஆரியர் வேதியர் ஆரணம் ஓதி**
**அம்பிகை நினைத்தொழ அணிதிரண் டுற்றார்**
**கூரிய வாள்விழி மூன்றுகொள் குமரீ!**
**குடதிசை நோக்கியே கோயில்கொள் ஐந்து**
**காரிய ராணீ!*வேற் காட்டுறை யோக*** 103
***கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 1.

**மேளங்கள் முழங்கின தாளங்கள் வழங்க**
**மேகம்போல் அதிர்ந்தன துந்துபி முழவம்**
**கோளங்கள் அண்டங்கள் குலுங்கிடச் சங்கின்**
**கூட்டங்கள் ஒலித்தன கோடைவான் இடிபோல்**
**நாளங்கள் திறந்துநீர் வரத்துறச் சென்னை**
**நகர்ப்புற நாரியர் நீர்பிடிக் கின்றார்**
**காளங்கள் ஊதும்*வேற் காட்டுறை யோக*** 104
***கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 2.

**மாலையும் கையுமாய் வழிபட வந்த**
**மக்களின் கூட்டம்நின் வரவெதிர் பார்த்துப்**
**பாலையும் தேனையும் நினக்கபி ஷேகம்**
**பண்ணவும் எண்ணியே காத்துநிற் கிறது**
**சோலையங் கிளிகளும் குயில்களும் புறவும்**
**துயில்எழுந் துன்திரு நாமங்கள் சொல்லும்**
**காலையம் பொழுதில்*வேற் காட்டுறை யோக*** 105
***கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே!** 3.

நளிநமும் பூத்துவாய் அவிழ்ந்தது; குவளை
நாணிவாய் மூடிற்று நாதன்மாற் றத்தால்
புளினமும் புலம்பின அலம்பின வளைகள்
புரந்தரன் மால்அயன் போன்றபுத் தேளிர்
களிறொடு கலுழன்மற் றனமிசை ஏறிக்
கடிதுனைக் காணவந் திறங்கிநின் றிறைஞ்சிக்
களிகொள்வர் காத்து;*வேற் காட்டுறை யோக* 106
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 4.

தாரகைக் கூட்டங்கள் தாம்மறைந் தன;தண்
சந்திரன் விண்ணிடைத் தலைமறை வானன்
பூரக ரேசக கும்பக யோக
பூரணர் வைகறைப் பொழுதிற்பூ ஜிக்கத்
தாரக மந்திரம் தாம்ஜபித் தவணம்
ஸந்நிதி முன்னின்று தவம்கிடக் கின்றார்
காரகிற் புகைகொள்*வேற் காட்டுறை யோக* 107
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 5.

யோகக ணேசர்க்கும் யோகஸ்கந் தனுக்கும்
யோகமா தாஎனும் லோகமா தாவே!
யோகஸம் பந்தற்கும் யோகசங் கரர்க்கும்
உள்ளிடம் கொடுத்(து)அவ ருடன்உறை தாயே!
ஏகமா மேருநாற் பத்துமுக் கோணத்(து)
எந்திரம் மந்திரம் தந்திரம் இயைந்தாய்!
காகங்கள் கரையும்*வேற் காட்டுறை யோக* 108
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 6.

நாயன்மார் அறுபான் மூவருள் ஒருவர்
நாமத்தால் மூர்க்கர்அந் நாள்வழி பட்ட
வேயதோள் வேற்கணி வேதபு ரீசர்
மேயின கோயில்கொள் *வேலங்காட்* டன்னே!
ஆயகீழ்த் திசைமுகக் கோயில்கொண் டணித்தாய்
அமர்அம்மை யாம்கரு மாரியும் ஆவாய்!

காயகர் திருப்பள்ளி உணர்த்தினர்; *யோக* 109
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 7.

முழுமனத் தோடுனை வழிபட எல்லா
முனிவரும் அமரரும் மனிதரும் மூசி
அழுபவர் பாடுவர் ஆடுவர் பேர்சொற்(று)
அர்ச்சிப்பர் தர்ஜ்ஜிப்பர் ஆநந்தக் கண்ணீர்
பொழிபவர் தொழுபவர் விழுபவர் பூமேல்
புரள்பவர் பூஜிப்பா ராகிக்காத் துளரால்
கழுமலத் தார்சொல்*வேற் காட்டுறை யோக* 110
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 8.

குண்டிகை இடக்கரம் கண்டிகை வலக்கை
கொண்டருள் கோலயோ காம்பிகைக் கொலுவோய்!
பண்டிகை திருவிழா இடபவி சாகம்
பவுர்ணமி பயில்மயில் இயற்குயில் மொழியாய்!
சண்டிகை யே!சண்ட முண்டரைக் கொன்ற
சாமுண்டி யே!கங்கை கொண்டபி ரான்முக்
கண்டிகை வாஸன்*வேற் காட்டுறை யோக* 111
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 9.

உனக்கென நூற்றெட்டு நாமத்தோத் திரமும்
உண்(டு)இவண் ஸுப்பிர பாதமும் தனித்தே;
நினக்கென அருட்புகழ்ப் பாவுண்டு நூறும்
நின்வழி படுமுறைப் பத்ததி வேறும்;
அனைத்தையும் அநுஷ்டிக்கும் அடியவர் கூட்டம்
ஆலய வாயிலில் அடைந்தழைக் கிறது
கனத்திருள் கழிய;*வேற் காட்டுறை யோக* 112
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 10.

உலகெலாம் கருவில்வைத் துயிர்த்தஉந் தியினுய்!
யோகநித் திரைபயில் யோகமா யையும்நீ!
அலகிலா உயிர்களு றுறக்கமாய் அமைந்தே
ஆநந்த அமைதிஉண் டாக்கும்அற் புதையே!

நிலவுல கினில்நிற்கு நித்திரை ஏது?
நீஉறங் கிடில்உல கேஉறங் கிடுமால்
'கலகல' விடியல்!*வேற் காட்டுறை யோக* 113
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 11.

சேயரைத் துயில்எழுப் பிடுந்திருத் தாயர்
ஜெகத்தினில் உண்டெனக் கண்டுகேட் டதுண்டு
தாயரைத் துயில்உணர்த் திடும்தனிச் சேயர்
தராதலத் துண்டுகொல்! தாய்உனை எழுப்பச்
சேய்எனக் கருளும்நீ செயில்அது செய்வேன்
தேவி!யோ காம்பிகை! திருவருள் திறந்தால்
காய்எனைக் கனிவி!*வேற் காட்டுறை யோக* 114
*கருமாரி* யே!பள்ளி எழுந்தரு ளாயே! 12.

(ஸ்ரீ யோக கருமாரி அம்மை திருப்பள்ளி எழுச்சி முற்றும்)



# ஸ்ரீ ஐயப்பன் திருப்பள்ளி எழுச்சி

(13-1-1966 -அன்று அருளிச் செய்யப் பெற்றது)

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம்  தாளம்: ஆதி



பூக்கள் மலர்ந்தன பொலிகயம் தோறும்
  பூங்கழு நீர்கள்கை கூப்பிஒண் புலரி
நோக்க வரும்கதிர்க் கஞ்சலி செய்வ;
  நுண்ணிடை மாதர்கள் நீராட வந்தார்
காக்கை கரைந்தது; 'கொக்கறு கோ'என்
  கத்தொலி செய்தது குக்குடம்; எங்கள்
ஆக்கையொ டாக்கமும் ஆவியும் ஆன  115
  *ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே!  1.

பஞ்சன மெல்லடிப் பதுமைபூ ரணையாள்
  பாவைநேர் புட்கலை பன்னிமார் இருவர்
மஞ்சனே! ஊமையை வாய்திறப் பித்த
  மதலையே! கேரளப் பந்தள மன்னன்
மஞ்சனே! கஞ்சநற் கண்ணனும் கண்ணன்
  மணிகண்டன் மைந்தனும் மணிகண்ட வள்ளால்!
அஞ்சன வண்ணத்துத் துஞ்சிருள் மேனி  116
  *ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே!  2.

தங்கவண் ணக்குழம் பொளிர்தழற் பிழம்புச்
  சக்கரம் ஒன்றுபைந் நீர்கருந் தரைமேல்
துங்கவண் ணத்தெழுந் துருள்தல்போல் எல்லோன்
  தோன்றினன் பகமைநீல் கருமைசால் கடல்மேல்
வங்கவண் ணப்புனல் போற்கடல் நீரும்
  வயங்கத் தொடங்கிற்று வண்கதிர் ஒளியால்
அங்கவண் ணத்தெழில் ஆண்டவ னே!எம்  117
  *ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே!  3.

மெய்ம்மையப் பன்தொப்பை யப்பன்வீ ரப்பன்
வீரபத் திரன்வைர வன்ஸம்பந் தப்பன்
எம்மையப் பன்குரு தாயாம்கந் தப்பன்
இவர்தமக் கப்பன்எம் ஒப்பிலி யப்பன்
செம்மையப் பன்செழுஞ் செஞ்சடை யப்பன்
சிங்கடி வனப்பகை அப்பனுக் கப்பன்
அம்மையப் பன்விண்டு வைப்புணர்ந் தீன்ற — 118
ஐயப்ப னே!பள்ளி எழுந்தரு ளாயே! — 4.

உடுபதி தண்ணொளி குன்றினன்; அற்றே
உடுக்களும் ஒளிமழுங் குற்றன; சற்றே
தொடுகடல் வானத்திற் செவ்வொளி துலங்கத்
தோன்றினன் அருணனும் அருக்கன்ஸா ரதியாய்க்
கடுவனும் மந்தியும் பறழ்களும் வரியும்
கரிகளும் திரிதரும் சபரியங் கிரியாய்!
அடுதிறல் அரக்கியாம் மஹிஷியைக் கொன்ற — 119
ஐயப்ப னே!பள்ளி எழுந்தரு ளாயே! — 5.

கையயன் புறத்தவன் கடல்வண்ணன் சாத்தன்
காரிவெள் ளானைபச் சைப்பரி யுள்ளோன்
நொய்யலர் நெய்தல்பூண் டோன்கோழிக் கொடியோன்
நுவல்வளை செண்டுதண் டணிந்தவன் சாஸ்தா
துய்ய உயோகிமா சாத்தன்எண் கரத்தோன்
தொல்லறங் காவலன் சாதவா ஹனன்மற்(று)
ஐயன்நல் அரிஹர ஸுதன்எனப் பெயர்கொள் — 120
ஐயப்ப னே!பள்ளி எழுந்தரு ளாயே! — 6.

அங்கயன் பங்கயன் அநுஜனும் அரசே!
ஐயப்பன் மார்பலர் ஐயப்ப! சரணம்!
அங்கயற் கண்ணுமை கங்கைசேய்! சரணம்!
அம்புய மின்புவி மின்ஸுத! சரணம்!
வெங்கய மற்றுய வாஹன! சரணம்!
வேதத்தின் உட்பொருள் ஆனவ! சரண்என்(று)

அங்கயன் இந்திரன் போற்சரண் விளிக்கும் 121
*ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே! 7.

ஸூரியன் செவ்வொளி கண்டுசெங் கமலம்
ஸுந்தர மாய்க்கண் மலர்ந்தென மலரச்
சீரிய தாமரை முகமலர்ந் திளைய
சிறுமியர் ஒருத்தரை ஒருத்தர் தாம்வந்த
காரியம் செப்பப்போய்க் கண்துயில் எழுப்பும்
காலமும் ஆயிற்று காலைநல் வேலை
ஆரியன் காவுறை ஆரிய னே!எம் 122
*ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே! 8.

அச்சன்கோ யில்குளத் துப்புழை திரியம்
பகபுரம் காந்த மலைப்பொன்னம் பலம்பூத்
தச்சன்கோ யில்நிறை தடங்கள்சூழ் பம்பைத்
தடினியங் கரைஎரு மைவேலி உறைவோய்!
எச்சன்கோ யிற்றிரு வரங்கன்எண் கண்ணன்
இந்திரன் சந்திரன் இவர்மகத் தடிதாழ்
அச்சன்கோ யிற்றிருப் பாலகன் ஆகும் 123
*ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே! 9.

தாயுறு நோய்தவிர் காரணம் புலிப்பால்
தனைக்கொணர்ந் திடவனம் திரிந்ததன் களைப்போ?
பேயுறு மஹிஷியைச் சங்காரம் செயும்முன்
பெண்ணென இரங்கிக் காலந்தாழ்த்த இளைப்போ?
தீயுருச் சிவன்அரி பயந்தமை யால்தாய்
சேய்உனக்(கு) யார்எனும் கவலையாற் சோர்வோ?
ஆயுறும் காரணம் ஏதினும் துயில; 124
*ஐயப்ப னே!*பள்ளி எழுந்தரு ளாயே! 10.

(ஸ்ரீ ஐயப்பன் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# மேற்பாடி ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் திருப்பள்ளி எழுச்சி

(25-12-1970 -அன்று அருளிச் செய்யப் பெற்றது)
(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

ஸூரியன் தோன்றுமுன் அருணன்வந் துதித்தான்
ஸுந்தர மாய்வெளுத் திந்திரன் திசைகண்(டு)
ஆரியர் நவக்ரஹ தர்ப்பணம் செய்தார்
ஆலயம் தொழுவது சாலநன் றென்று
நாரியர் நறும்புனல் ஆட நிவாநீள்
நதிப்புறம் போயினர் ஞாயிறு வரமின்
வாரிஅ் விந்த;*மேற் பாடியில் வீர* 125
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 1.

பிறையவன் ஜடையவன் விடையவன் எவர்க்கும்
பெரியவன் அரியவன் உரியவன் புகழ்க்கே
இறையவன் கறைக்களக் கறையவன் அடியார்க்
கெளியவன் அளியவன் தளியவன் இதயத்
துறையவன் குறையறு நிறையவன் பதினோ
ருருத்திரர் உருவனும் ஒருவனின் வடிவோய்!
மறையவர் வாழ*மேற் பாடியில் வீர* 126
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 2.

தும்பிகள் பறந்தன சூழ்ந்துரீங் காரத்
துழனியோ டுழவர்கள் கழனிவாய்ச் செல்லக்
கும்பிருள் நீங்கிற்று குளிர்ந்தது காலை
கோயில்கள் திறந்தன வாயிலிற் சங்கம்
நம்பிகள் ஊதினர் நங்கையர் எல்லாம்
நாற்புறத் தும்திருக் கோலமிட் டுகுபூ
வம்பினில் தேன்மொய*மேற் பாடியில் வீர*
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 3.



அஞ்ஜனை மைந்தனே! அநிலபுத் திரனே!
ஐவருள் வீமனுக் கானஸோ தரனே!
கஞ்ஜனை உயிர்கவர் கண்ணனை அந்நாள்
காகுத்த னுவரக் கண்டுகை தொழுதோய்!
முஞ்ஜனை ராவண வஞ்ஜனை இலங்கை
மூர்க்கனை ராகவ தூதனு முன்வெல்
மஞ்ஜனே! தொண்டை *மேற் பாடியில் வீர* 128
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 4.

பூக்கொடு வந்தனர் புண்ணியர் பூஜை
புரிந்திட அருந்தவில் மேளதா ளங்கள்
நோக்கொடு முழக்கவல் லுநர்பலர் நுழைந்தார்
நுன்திருச் சந்நிதி முன்தமிழ் வடசொல்
வாக்கொடு பயில்அடி யார்கணம் வந்து
வணங்கிமுன் காத்துநிற் கின்றது கோலம்
மாக்கொடு பொலியு*மேற் பாடியில் வீர* 129
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 5.

இலங்கிணி வதம்செயும் எதிரிலாத் திறலோய்!
இளம்பெரு மான்இலக் குவன்தனக் குயிர்முன்
துலங்கிடச் சமயஸஞ் ஜீவியைக் கொணர்ந்து
துக்க நிவர்த்திசெய் ஸுகம்தரு மூலா!
இலங்கையைத் தீக்கிரை யாக்கிய நெடுவால்
எழுப்பிய கோட்டைமேல் இருந்(து)இரா வணன்பால்
வலங்கிளத் தொருத்த!*மேற் பாடியில் வீர* 130
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 6.

ஆனைவந் ததுபசுப் போந்தது கமலம்
ஆடிநல் வீணைபுத் தகம்இரு நிதியம்
தேனைவண் டுணும்பிற மலர்வகை தேங்காய்
தீபங்கள் பூரணப் பொற்கல சங்கள்
பானைவண் தீம்பசும் பால்நவ மணிகள்
பாடுநா மணிபறை பார்க்கமுன் படைத்தோம்

வானைமண் வெல்லு*மேற் பாடியில் வீர* 131
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 7.

நாரதர் தமையுமின் னிசையில்வென் றவனே!
நவஇலக் கணங்களும் நபோமணி பாற்கற்(று)
ஓரதர் வான்வழி உவனுடன் தொடர்ந்த
ஒப்பறு கருமம்கண் ணுயின ஒருவ!
நீரதத் திடையில்வின் மணியைச்செங் கனியா
நினைத்திள மையிற்கவுங் காற்கடத் தாடை
வாரதன் *சிவந்தமேற் பாடியில் வீர* 132
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 8.

ராமநா மம்சொலிப் பஜனைசெய் கின்ற
ரஹரஹ மாம்பக்தர் குழுக்கள்காத் துளவால்
நாமமே ருசியென நாக்கொடு ரஸித்த
நாயக னும்சிரஞ் ஜீவிநீ துயின்றும்
நாமஹா மந்திரம் ஜபித்தலை மறந்து
நழுவிடு மோ?நினக் கிதும்உப சாரம்
மாமதீ! எழுப்பல்;*மேற் பாடியில் வீர* 133
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 9.

வெள்ளிலைக் கண்ணிவை தேஹிகை ஆழி
விதித்தவள் முடிமணி கொணர்ந்திரா கவன்கைக்
குள்ளிடக் கடல்கடந் துருப்பெருத் திலங்கைக்
கோடிமீண் டவ!புயத் திராமலக்ஷ் மணரை
நள்ளிவைத் தையிரு சிரனொடு பொருங்கால்
நன்குத வியபொலன் நிறக்கண்வா னரனே!
வள்ளிவெற் படுத்த*மேற் பாடியில் வீர* 134
*மாருதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 10.

(மேற்பாடி ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

# ஸ்ரீ அருணகிரிநாதர் திருப்பள்ளி எழுச்சி

(22-12-1960 -அன்று அருளப் பெற்றது)
(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி



வளர்ஒளி பரப்பிட வந்தனன் கதிரோன்
மாலையும் போய்க்குளிர் காலைவந் ததுவால்
விளர்ஒளி தாங்கிய உடுக்குலம் மறைந்து
விட்டது தொட்டது கீழ்த்திசை ஒளியைத்
தளர்ஒளிச் சந்திரன் தயங்கினன் பூக்கள்
தாமரைத் தடம்மிசை மலர்ந்தன எங்கும்
கிளரொளி *அண்ணு மலைவரும் அருண* 135
*கிரிநாத* ரே!பள்ளி எழுந்தரு ளீரே! 1.

பாடிநும் திருப்புகழ்ப் பஜனைசெய் கின்றார்
பலபல பக்தர்கள் சிலபல வகையாய்க்
கோடிசந் திரனொடு ஸூரிய ஒளியோன்
கோயிலைத் திறந்தியாம் கும்பிட வந்தோம்
நாடிநும் தரிசநம் கண்டபின் அவனை
நாத்தழும் பேறநும் மொடும்இசை பாடும்
கேடில்எண் ணத்துடன் வந்தனம் *அருண* 136
*கிரிநாத* ரே!பள்ளி எழுந்தரு ளீரே! 2.

செஞ்சுகம் என்றுல கைச்சிறு காலம்
சிந்தித் திருந்தது போதும்என்(று) எண்ணி
அஞ்சுகம் ஏதென்று தேடிக்கண்(டு) அறிவான்
அதையும்நும் பால்அறி வான்வந்து நின்றேம்
மஞ்சுகண் டாடுறும் மயில்என ஆடி
வள்ளி மணாளனை வாழ்த்திநின் றேம்யாம்
கிஞ்சுக வாய்கொளும் அஞ்சுகம்! *அருண* 137
*கிரிநாத* ரே!பள்ளி எழுந்தரு ளீரே! 3.

மறிமிசை ஏறுவோன் மலரடி நினைந்து
 மந்திர சாஸ்த்திர நூல்அநு பூதி
அறிவினுக் கணியென அளித்தஎம் அரசே!
 அந்தாதி தந்தஎம் சிந்தாத தநமே!
செறிபுகழ்க் கந்தவேள் மேல்அலங் காரம்
 திருவகுப் போடுமெய்த் திருப்புகழ் செய்தீர்!
கிறிசெயா தெங்கள்முன் னேவர *அருண* 138
 *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! 4.

ஆவல தாற்குஹன் உறையுமா தலங்கள்
 அனைத்தையும் வலம்வந்து தர்சநம் செய்தீர்!
சேவல தாஅவன் திருவடித் துணையே
 சிக்கெனப் பிடித்துச் சிறந்தஎம் குருவே!
பாவலர் நாவலர் பக்தர்கள் நும்மைப்
 பற்றிய கட்டியம் பலபட உரைத்தார்
கேவல ஸுகத்தினும் மீறிய *அருண* 139
 *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! 5.

பிள்ளைபோல் போட்டிகண் டான்ஸம்பந் தாண்டான்
 பேதுற முருகனைப் பிரபுட தேவன்
வெள்ளையுள் ளத்தினற் காணமுன் அவையில்
 விரைவுற வரவழை வித்தக யோகீ!
தள்ளையும் தந்தையும் ஸாமிஸற் குருவும்
 ஷண்முக னேஎனத் துணிந்தநத் துவரே!
கிள்ளையாய் வைஷ்ணவி கரத்துறும் *அருண* 140
 *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! 6.

ஏட்டனம் சிறகுலர்த் தாஇள வெயில்முன்
 எழுந்தது செழுங்குயில் கூவிற்று முறையே
வீட்டனம் சமைத்து நிவேதநம் செய்வான்
 வேயன தோளியர் வைகறை ஆடல்
கேட்டனம் சங்கொலி கேட்டனம் முரசு
 கேட்டனம் புட்குரல் கேட்டனம் காளம்

கேட்டனம் விடிவடை யாளங்கள் *அருண* 141
    *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! **7.**

ஸாதந சதுஷ்டயம் அறிந்தனு நியர்தம்
    தண்பெருஞ் சூழலில் தனிப்பெருந் தலைவ!
வேதனை வாதுசெய் வில்லிபுத் தூரார்
    வெட்கிட வென்றஎம் வாக்கினுக் கரைய!
சோதனை செயாதெமைத் துயிலெழுந் தருளித்
    தோத்திரத் திருப்புகழ் இன்னமும் பாடிக்
கேதம தறுக்க நினைந்திடீர்! *அருண* 142
    *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! **8.**

வாள்வளை மங்கையர் சிக்கல் உறுமே
    மாயவன் மருமகன் வலையகப் பட்டுத்
தோள்வலி எய்திடத் துத்திய நூல்கள்
    சுமந்திஅன் னுன்றனைத் தொழுபெருந் தகையே!
தாள்வலி யாற்பல தலவலஞ் செய்து
    தாவரும் ஊர்அம ராவதி புக்கீர்!
கேள்வியிற் சிறந்தஎம் அருளொளி! *அருண* 143
    *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! **9.**

மேதகை யே!பெரு மாதவர்க் கிறையே!
    விநாயகர் பரசிவன் பார்வதி வள்ளி
தீதறு கந்தன் திருவருள் பெற்று
    ஜெபமாலை கையுறும் சீரிய மோதீ!
'நாத'ஞும் பட்டமும் நாவில்ஆ றெழுத்தும்
    நவில்கொடி வேல்மயிற் பொறியதும் பெற்றீர்!
கேதகை பூக்கும்*அண் ணுமலை அருண* 144
    *கிரிநாத ரே!*பள்ளி எழுந்தரு ளீரே! **10.**

அளியினுல் எங்கள்மேல் ஆதர வாக
    ஆண்டவன் அருளினைப் புகட்டுவான் வந்த
களியுடை யீர்இ(ன்)னம் துயிலல் தகாது
    கந்தன்முன் எம்மையும் அன்பராக் காட்ட

**வெளிவர வேண்டும்இப் போ(து)எங்கள் முன்னர்**
**விரிகரு ணைக்கிரி என்றுகேட் டோம்பேர்**
**கிளியென எங்கணும் புகழ்சொலும் *அருண*** 145
***கிரிநாத* ரேபள்ளி எழுந்தரு ளீரே!** 11.

**அஞ்சிறைப் புள்மிசை ஊர்பவன் மீதே**
**அழகெழும் ஓர்எழு கூற்றிருக் கையுமே**
**கொஞ்சிமுன் பாடிக் கொடுத்துளீர்! விருத்தம்**
**கூரயில் சேவல் மயில்மிசைக் கூறி;**
**பஞ்சியங் கால்மட மாதர்கள் ஆடல்**
**பயின்றனர் வண்டினம் பண்ணிசை முழக்கக்**
**கெஞ்சியும் கேட்டுநிற் கின்றனம் *அருண*** 146
***கிரிநாத* ரேபள்ளி எழுந்தரு ளீரே!** 12.

(ஸ்ரீ அருணகிரிநாதர் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

## வேல் மாறல் மஹாமந்த்ரம்

அருணகிரிநாதரின் 9 நூல்களுள், திருவகுப்பும் ஒன்று. சந்தத்தில் அமைந்த அந்த 25 வகுப்புகளுள், முருகவேள் திருக்கரத்து வேலாயுதத்தின் பெருமையை விரிவாகக் கூறுவன வேல்வகுப்பும், வேல் வாங்கு வகுப்பும் ஆம். இவ்விரண்டினுள், ஔஷத வகுப்பாம் வேல் வகுப்பை எடுத்துக்கொண்டு, அதன் 16 அடிகளை முன்னும் பின்னுமாகவும், மேலும் கீழுமாகவும் அழகுபடத் தொகுத்து, அதன் பாராயணப் பயனைப் பன்மடங்காக்கி *வேல் மாறல்* என்ற பெயரில் 1923-ஆம் ஆண்டில் மந்த்ர நூலாக மக்களுக்குத் தொகுத்தளித்தார் வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் அவர்கள். பூஜைக்குரிய வேல்மாறல் சக்கரத்தினை 1976 -இல் ஸாதுராம் ஸ்வாமிகள் வடிவமைத்து அளித்தார்.

இப் பாடல்களை, ராக-தாளங்கள் இன்றியும் ஆண்-பெண் அனைவரும், அனைத்து மதத்தினரும் பாராயணம் செய்யலாம். இந்நூற் பாராயணம் காக்கை வலிப்பு (கால், கை வலிப்பு - Epilepsy), புற்றுநோய் (Cancer) உள்ளிட்ட எல்லா உடல் நோய்களையும், பைத்தியம், ப்ரமை, மயக்கம், பயம் போன்ற மந நோய்களையும், உயிருக்கு உள்ளதாகிய அஞ்ஞாந (அறியாமை) நோயையும் நீக்க வல்லதாய் *ஸர்வ ரோக நிவாரணி* எனப் பெயர் பெறும். திருமணம் கைகூடுதல், புத்திரப் பேறு, வியாபாரத்தில் வெற்றி, நோய் நீங்குதல், அலுவலகத்தில் அமைதி, மநச் சாந்தி முதலியன போன்ற பல நலன்களையும் வேல்மாறல்தனைப் பாராயணம் செய்தோர் அடைந்துள்ளனர்.

# ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி



(10-1-1963 -அன்று அருளப் பெற்றது)

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

சேயனை ஆட்கொள வேண்டியே கொங்கு
 தேசத்தில் மேயசெங் கோடன்இன் னருளால்
போயனை இலக்குமி அம்மையார் கணிதப்
 புலவர் சிதம்பர ஐயர்புத் திரனய்
நாயனை வாழ்த்தும்பூ நாச்சியில் 'அர்த்த
 நாரி'என் றேஅவ தாரம்செய் நல்லோய்!
தாய்அனை யாய்!*வள்ளி மாமலை ஸச்சி* 147
 *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 1.

மேதையர் தாம்பலர் வியப்புற மைஸூர்
 வியன்அரண் மனைக்கண் மடைத்தொழில் செய்தாய்
பேதையர் இருவரை மணஞ்செய்து கொண்டு
 பெருமையாப் பேணிய இல்லற வாழ்க்கைப்
பாதையில் வந்த படர்அது கண்டு
 பழமநம் மாறிவா நப்ரஸ்த்தம் பூண்டாய்!
தாதைஅன் னாய்!*வள்ளி மாமலை ஸச்சி* 148
 *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 2.

சிற்குரு வே!தெய்வத் திருப்புகழ் முழக்கம்
 செய்தச்சி தாநந்த தெய்விகக் குருவே!
தற்குரு வே!பர ஸாதநக் குருவே!
 ஸத்திய ஸத்துவ தத்துவம் விளக்கும்
நற்குரு வே!சிவ ஞாநமெய்க் குருவே!
 ஞாநசக்த் யாயுதன் அடிதொழுங் குருவே!

ஸற்குரு வே!*வள்ளி மாமலை ஸச்சி* 149
   *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 3.

சைவ தபோதந மோநஸா தகனே!
   சத்ருஸங் காரவேல் கொண்டொரு சூரைப்
பொய்வதஞ் செய்த புராதநன் புணரும்
   புனக்கொடி பாத இருதயப் ப்ரபுவே!
ரைவத நாட்குமுன் எட்டாவ தாக
   இலகுடு மூலத்தில் அவதரித் தருளும்
தைவத மே!*வள்ளி மாமலை ஸச்சி* 150
   *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 4.

திருப்புகழ் ஸ்வாமி எனும்பெயர் உடையாய்!
   சேஷாத் திரிப்பெயர் மாமுநி உனக்குத்
'திருப்புக ழேமஹா மந்திரம்' என்று
   செப்புப தேசத்தால் தீக்ஷைசெய் தருளக்
குருப்புகழ் பெற்றந்த வேங்கட ரமணர்
   கோவணங் கோல்கொண்ட கோலங்கண் டுருகும்
தருப்புக ழார்*வள்ளி மாமலை ஸச்சி* 151
   *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 5.

ஷண்முகன் பன்னிரு திருக்கரப் பேரால்
   தகுபுகழ்த் திருப்புகழ் ஸபைகளை நிறுவி
விண்முக வானவர் மானவர் எவரும்
   வியந்து கசிந்துளம் உருகிடப் பாடி
உண்முக மாகஓங் காரத்துட் பொருளை
   உற்றித யாகாசத் தில்தரி சித்த
தண்முக னே!*வள்ளி மாமலை ஸச்சி* 152
   *தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 6.

முருகப் பிரம்மமா மொழிதிருப் பேர்கொள்
   முத்தைஎந் தாய்!எந்தை தந்தைதந் தாயே!
உருகத் திருப்புகழ் ஓதுதல் ஒழியா
   ஒப்பிலி யே!ஒரு தப்பிலி யே!சீர்

பெருகத் திருப்புகழ் வள்ளிமலை யாணப்
 பிரஸங்கஞ் செய்துபேர் பெற்றபே ராளா!
தருகநல் லூழ்!*வள்ளி மாமலை யச்சி* 153
 *தாரநத்து!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 7.

புற்றுக்குப் பால்தெளித் திடுதல்கோ பூஜை
 பொங்கிக்குப் படைத்திடல் பெரியவர்க் கந்நம்
மற்றுக்க ணேச கிரிவழி பாடு
 மாநவமி கப்பாரா யணமுறை எல்லாம்
கற்றுக் கொடுத்தெமைக் கைதூக்கி விட்டுக்
 கடவுள் நெறிச்செல வித்திட்ட கருணை
சற்றுற்றி(ந்) நான்*வள்ளி மாமலை யச்சி* 154
 *தாரநத்து!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 8.

மலைமிசைப் பன்னிரு வருஷங்கள் தவத்தே
 மன்னிப்பா ராயணத் திருமுறை தொகுத்து
விலைமதிக் கொண்ணுமெய்க் காவல்வேல் மாறல்
 விளம்பநுஷ் டாநத் திருப்புகழ் மேலும்
தொலைவில்பா ராயணக் குண்டுகோ பூஜைத்
 தோத்திர நூல்களெல் லாம்தொகுத் தருளித்
தலைசிறந் தாய்!*வள்ளி மாமலை யச்சி* 155
 *தாரநத்து!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 9.

திருத்தணித் திருப்புகழ்த் திருவிழாத் துவக்கம்
 செய்தனை! அருணையர் ஜெயந்திநன் னாளைக்
கிருத்திகை மூலத்திற் கெழுமக்கொண் டாடிக்
 கிளர்அந்த தாநம் சிறக்கச்செய் தனை!எம்
கருத்துறை வைஷ்ணவி அம்மைக்கந் நாமம்
 காச்மீரத் திற்கண்ட வடிவத்தால் வைத்தாய்!
தருத்திர ளார்*வள்ளி மாமலை யச்சி* 156
 *தாரநத்து!* நீபள்ளி எழுந்தரு ளாயே! 10.

போது விடிந்தது! தாமரைப் போது
 பூத்தது! புறஇருள் அஹஇருள் எல்லாம்

ஏதும் இலாதற ஞாயிறும் எந்தம்
இதயத்துள் ஞாநமும் உதயமா யினவால்;
காதுங்கா தும்வைத்த வாறென யாங்கள்
கண்துயில் எழுப்பவந் துள்ளனம் உன்னே;
ஸாதுக்கள் வாழ்வள்ளி மாமலை ஸச்சி — 157
*தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! — 11.

குருவெனும் பதத்தினுக்(கு) அஞ்ஞாந இருளைக்
கொன்றுபோக் கடிப்பவன் எனப்பொருள் சொல்வர்
அருவெனும் இருள்அறிந் தொழிக்கும்நீ உருப்போல்
அமைபுற இருள்அகன் றதைஉண ராயோ?
கருவெனும் இருட்டறைக் கிடந்தசே யோமைக்
கடைக்கணித் தேகடைத் தேற்றமெய் யொளியைத்
தருகுரு வே!வள்ளி மாமலை ஸச்சி — 158
*தாநந்த!* நீபள்ளி எழுந்தரு ளாயே! — 12.

(ஸ்ரீ ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

## காஞ்சி காமகோடி பீடம் பரமாச்சார்யார் ஜகத்குரு

# ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி

(13-4-1965 -அன்று அருளிச் செய்யப் பெற்றது)

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

இந்திர போகம்நின் யோகத்துக் கிணையோ
ஏழிசை களும்உன்றன் இன்னிசைக் கிணையோ
மந்திர ஜாலம்நின் வாய்மொழிக் கிணையோ
மண்டலம் யாவும்நின் கழற்பொடிக் கிணையோ
சந்திர சூர்யர்நின் கண்ணொளிக் கிணையோ
சங்கரா சாரிய ஸத்குரு மணியே!
சந்திர சேகரேந் திரஸரஸ் வதிஎம்
ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!



சுந்தரர் சந்திர மவுலிஈ சர்க்கும்
தூமொழி திரிபுர சுந்தரி உமைக்கும்
வந்தர ஹரஎனப் பக்தர்கள் வணங்க
மலர்வழி பாடுசெய் வதுமறந் தாயோ!
அந்தணர் ஆரியர் ஆயிரக் கணக்கில்
அர்ச்சனைக் காமலர் தூபதீ பங்கள்
சந்தன குங்குமம் தாங்கிக்காத் துள்ளார் 160
ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே! 2.

காலையும் மாலையும் கங்குலும் பகலும்
கணப்பொழு தும்மற வாதரன் உருவிற்
பாலையும் தேனையும் சந்தனக் குழம்பும்
பன்னீரும் வார்த்தபி ஷேகித்து வேதம்
நாலையும் ஓதிநற் பூஜைசெய் வதுவே
நாள்தொறும் செய்திருத் தொண்டெனக் கொண்டு

தாலேயும் புகழ்சொல அவனுக்கர்ப் பணித்த 161
*ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 3.

பிறக்கினும் உன்னேப்போற் பிறந்திட வேண்டும்
பின்னேயும் வாழினும் வாழ்வாங்கு வாழ்ந்து
சிறக்கினும் உன்னேப்போற் சிறந்திட வேண்டும்
தெய்வத்தை உன்னேப்போல் வழிபட வேண்டும்
மறக்கினும் உன்னேப்போல் உடல்பொருள் ஆவி
மற்றும்நித் திரைசுகம் பசிதாகம் மறந்து
திறக்கலே ஞாநியாத் திகழஎற் கருள 162
*ஜெகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 4.

சூரியன் போலத்தன் கடமைமா றுது
தூயநித் திரைகலேந் தெழுந்தது முதலே
காரியத் திற்கண்ணுய்க் கடவுட்பூ சனேயிற்
கருத்திேனச் செலுத்திநன் மக்களுக் காக
ஆரிய! நீதுயில் கொள்ளப்போங் காறும்
அற்புதப் பொறுமையோ டரும்பணி செய்தல்
சீரிய செயல்எனத் தெளிந்துணர்ந் தனம்யாம் 163
*ஜெகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 5.

யோகநித் திரைபயில் அரங்கத்தெம் மான்போல்
யோகியர் போலத்தான் நீதுயில் கின்றுய்!
பாகவ தர்களேப் பண்பிற்பா லிக்கும்
பரமன்பால் அன்றிநின் மனம்துயில் கொளுமோ?
ஏகம னத்துடன் மக்களேக் காக்கும்
இக்கவ லேக்கிடை எங்ஙனம் துயில்வாய்?
ஸாகஸ மேன்?மிக உறங்குதல் போல; 164
*ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 6.

மாதர்கள் ஒருபுறம் ஆசார மாக
மடிசெய்து கொண்டலங் காரதீ பங்கள்
பாதகா ணிக்கைகள் பரிவுடன் ஏந்திப்
பாட்டுக்கள் பாடியே காத்திருக் கின்றுர்

வேதம்வல் லார்பலர் வேதியர் மேலும்
விச்வகு பத்தரி சனகாண வந்த
தாதர்கள் பற்பலர் தவம்கிடக் கின்றார் 165
*ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 7.

பஞ்சணை மெத்தையிற் பள்ளிகொள் ளாமற்
பல்லக்கே மஞ்சமாப் பள்ளிகொள் கின்றாய்!
நெஞ்சமே மஞ்சமா நினக்கமைத் துள்ளேன்
நீவரும் நாள்எதிர் பார்த்திருக் கின்றேன்
கஞ்சமே போல்மென்மை காட்டாவிட் டாலும்
கடினம்நின் காற்கஞ்சம் பட்டதும் மறையும்
தஞ்சம்என் றேன்அஞ்சி டாதெழுந் தருள 166
*ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 8.

நீவந் தெழுப்புதற் காகநின் இறையும்
நிர்மலை காமாட்சி அமையும்காத் துளரால்
கோவந்து நின்றுள(து) அன்பர்கள் நிதியம்
கோகன கம்விளக் காடிகைக் கொடுபூ
மீவந்து நின்றனர்; சோலையிற் குயில்கள்
வீணைபோல் மிழற்றின; வெயிலெழும் நேரம்;
சேவந்த தேவொடு கஜபூஜை செய்ய 167
*ஜெகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 9.

நாள்முழு தும்உழைக் கின்றநீ உறங்கும்
நாழிகை ஓய்வெடுக் கச்சற்றும் போதா(து)
ஆள்வகை எங்களைக் காண்பதற் காக
அரைமனத் தோடஞ்சி யேஎழுப் புவம்யாம்
கேள்விவல் லார்புதுப் பெரியவர் களையும்
கீதஞ்சொற் றெழுப்பிடச் செல்லவேண் டும்யாம்
தாள்வலி யால்அருள் சங்கரா சார்ய 168
*ஜகத்குரு வே!பள்ளி எழுந்தரு ளாயே!* 10.

(பரமாச்சார்யார் ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்
திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

## காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு
# ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி



(1-6-1965 -அன்று அருளப் பெற்றது)

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

மகத்துவம் மிகுத்தவர் மாதிஎம் பரனோ
  மாசில்வி யாதரோ ஆதிசங் கரரோ
அகத்திய முநிவரோ இவர்தமுள் ஒருவர்
  அவதரித் தனர்இவண் மீண்டும்வந் தெனவே
மிகத்தமிழ் நாடுடைப் பாரத தேசம்
  வியந்துசொல் சந்திர சேகரேந் திரராம்
ஜகத்குரு சங்கரர்க் கடுத்த *ஜயேந்த்ர* 169
  *ஸரஸ்வதீ யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 1.

காலையங் கதிரவன் உதயவெற் பதனிற்
  கதிரொளி பரப்பியே கடற்புனல் சிவப்ப
வேலையங் கெழுந்தனன்; வெயில்உமிழ் கொடியும்
  வீட்டின்மேற் கூரையிற் கூவிற்று; விடியற்
காலையங் கானதைக் காட்டிடக் காகம்
  கரைந்தது பறந்தது கூட்டைவிட் டிரைக்கே
சாலைஎங் கெங்கணும் சார்ந்து; *ஜயேந்த்ர* 170
  *ஸரஸ்வதீ யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 2.

சுக்கிரன் உதித்தனன் சூரியன் உதிக்கும்
  தோற்றத்தை உணர்த்திட அருணன்வந் துதித்தான்
அக்கிர மங்கள்தாம் அழிதல்போல் இருள்போய்
  அழிந்தது; தாரகை ஒளிமழுங் கிற்று;
புக்கிர வெனுமகள் பாதல மகனைப்
  புணருவான் ஒளிந்தனள் கீழைவான் வெளுப்பச்
சக்கிர தாரியை ஸ்மரிக்கும் *ஜயேந்த்ர* 171
  *ஸரஸ்வதீ யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 3.

காமரம் பாடின வண்டுகள்; மறையோர்
காலையிற் சந்தியா வந்தநம் செய்து
நாமறை பாடிட ஆதித்தி யாதி
நவக்ரஹ தர்ப்பண ஜபம்தபம் எல்லாம்
பூமறை யோன்எனப் பொலிந்துசெய் கின்றார்
பொழில்பயில் கோகிலம் துயில்உணர்த் திடக்கண்
தாமரை மலர்ந்தது தடத்தில்; *ஜயேந்த்ர* 172
*ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 4.

வாசனை மலர்களால் வில்லுவத் தழையால்
மருத்தளிர் வகைகளாற் சந்திர மவுலி
ஈசனைத் திரிபுர சுந்தரி இலகும்
இயந்திர மேருவை விக்கிநேச் சுரனைப்
பூசனை முறைமையிற் புரிந்திடக் கஜகோ
பூஜையைத் தரிசனம் செய்யவேண் டாவோ?
தாசனை ஆளநன் னேரம்; *ஜயேந்த்ர* 173
*ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 5.

புன்னகை பொலிந்திடும் திருமுகத் திளைய
புதுப்பெரி யவர்நுமைத் தரிசிக்க வேண்டும்
நன்னய விச்வரூ பத்தரி சனமா
நவில்திரு வனந்தலைக் கண்டுய்ய வேண்டும்
என்னவெல் லாம்எண்ணி எங்கெங் கிருந்தோ
எத்தனை யோமக்கள் வந்துகாத் துள்ளார்
தன்னலம் அற்றதி யாகி! *ஜயேந்த்ர* 174
*ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 6.

ஆதிசங் கரர்திரு முகத்தடை யாளம்
அடிகள்நின் திருமுகத் தமைதிகாட் டிடுமால்
வேதியர் பற்பலர் அம்முகம் காண
வேண்டியே காணிக்கை விதவித மாகப்
போதிய வகைகளிற் கைகளில் ஏந்திப்
பொற்சுடர்த் தீபமும் கையுமாய் வருபெண்
ஜாதிய ரொடும்வந்துற் றுர்கள்; *ஜயேந்த்ர* 175
*ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே! 7.

**குவலயம் புகழ்திருக் காஞ்சிநற் காம**
**கோடிநற் பீடத்தை அலங்கரித் திடுவான்**
**நவமுற ஆறுபத் தொன்பதாம் பட்டம்**
**நண்ணிய பீடாதி பதிஎன வந்த**
**யுவஜகத் குருவெனும் சங்கரா சார்ய**
**யோகிமெய்ஞ் ஞாநிநன் மோநியு மான**
**தவமுத லாம்யதி ராஜ! *ஜயேந்த்ர*** 176
***ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே!** 8.

**கோடி இலக்கம்பத் தாமிரக் கணக்கிற்**
**கொடுக்கவல் லார்ஒன்றும் இல்லாத பேர்கள்**
**நீடிய பண்டிதர் பாமரர் எவர்க்கும்**
**நிர்ப்பேத மாய்அரு ளாசி வழங்கிப்**
**பாடிய பாடம் நினக்கறி விக்கும்**
**பண்டைப் பெரியவர் வழிவந்து பந்தம்**
**சாடிய ஸத்குரு நாத! *ஜயேந்த்ர*** 177
***ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே!** 9.

**இளைய பிராயத்தும் பல்லக்கில் ஏறு(து)**
**எங்கெங்கோ பல்காதம் நடந்த களைப்போ?**
**வளைய வரும்ஜன சமுகத்தொ டெல்லாம்**
**வாயார அளவளா வியபெருங் களைப்போ?**
**உளைய வருந்திடும் உலகர்தம் பாரம்**
**உள்ளத்தில் ஏற்(று)அதற்(கு) உருகிடும் இளைப்போ?**
**தளையறத் துயில்வதென்? புகல்தி! *ஜயேந்த்ர*** 178
***ஸரஸ்வதி யே!*பள்ளி எழுந்தரு ளாயே!** 10.

(ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

ௐ ௐ ௐ

*அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்*
*அருளிச் செய்த திருஅருட்புகழ்த் திருப்பள்ளி எழுச்சிகள் முற்றும்.*

ௐ ௐ ௐ

## இந் நூலில் அச்சிடப் பெறுத ப்ராத: ஸ்மரண, ஸுப்ரபாத, எம்பாவை, பள்ளி எழுச்சி நூல்கள்:

1.1. ஆத்ம தத்வ ப்ராத: ஸ்மரணம்

__*விநாயகர்*__ 2.1. ஸ்ரீ கணேச ஸுப்ரபாதம் (B), 2.2. டில்லி ஸ்ரீ கல்பக விநாயக ஸுப்ரபாதம் (J), 2.3. மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் எம்பாவை (C)

__*முருகவேள்*__ 3.1. திருச்செந்தூர்க் கார்த்திகேய ஸுப்ரபாதம், 3.2. பெங்களூர்ப் பநஸபுரி (அல்ஸூர்) ஸுப்ரம்மண்ய ஸுப்ரபாதம், 3.3. ஸ்ரீ வல்லீ ஈச ஸுப்ரபாதம் (A), 3.4. திருத்தணிகேசர் எம்பாவை (D), 3.5. திருத்தணிகேசர் திருப்பள்ளி எழுச்சி (D), 3.6. திருத்தணிகை ஷண்முகன் திருப்பள்ளி எழுச்சி (E), 3.7. முருகன் திருப்பள்ளி எழுச்சி (F), 3.8. திருமுருகன் எம்பாவை (G), 3.9. திருச்செந்தூர் ஆறுமுகன் திருப்பள்ளி எழுச்சி (G), 3.10. மார்கழித் திருப்புகழ்ப் பாராயணத் திருமுறை (H)

__*சிவபெருமான்*__ 4.1. ஸ்ரீ ஏகாம்ரேச்வர ஸுப்ரபாதம் (B), 4.2. அர்த்தநாரீச்வர ஸுப்ரபாதம் (J), 4.3. ஸ்ரீசைலம் மல்லிகார்ஜுன ஸுப்ரபாதம், 4.4. கஜாரண்யம் ஆனேசர் திருப்பள்ளி எழுச்சி (K)

__*அம்பிகை*__ 5.1. ஸ்ரீ லலிதா ப்ராத: ஸ்மரணம், 5.2. ஸ்ரீ த்ரிபுரஸுந்தரி ப்ராத: ஸ்மரணம், 5.3. திருமயிலைக் கற்பகாம்பா ஸுப்ரபாதம் (B), 5.4. ஸ்ரீ காமாக்ஷி ஸுப்ரபாதம் (B), 5.5. ஸ்ரீ புவநேச்வரீ ஸுப்ரபாதம் (J), 5.6. ஸ்ரீ புவநேச்வரீ திருப்பாவை (L), 5.7. ஸ்ரீ புவநேச்வரீ திருப்பள்ளி எழுச்சி (L), 5.8. திருமயிலைக் கற்பகாம்பிகை திருப்பள்ளி எழுச்சி (M)

__*திருமால்*__ 6.1. ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம், 6.2. குருவாயுபுரேச ஸுப்ரபாதம் (A), 6.3. கடிகாசல யோக நரஸிம்ம ஸுப்ரபாதம், 6.4. குருவாயூர் ஸுப்ரபாதம், 6.5. திருமாலிருஞ்சோலை அழகர் ஸுப்ரபாதம் (N)

__*ஐயப்பன்*__ 7.1. ஸ்ரீ சாஸ்தா ஸுப்ரபாதம் (B)

__*மஹான்கள்*__ 8.1. ஸ்ரீ ராமக்ருஷ்ண ஸுப்ரபாதம், 8.2. ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி (C), 8.3. ஸ்ரீ ரமணர் திருவெம்பாவை (P), 8.4. ஸ்ரீ ரமணர் திருப்பள்ளி எழுச்சி (P), 8.5. ரிஷிகேசம் சிவாநந்த ஸ்வாமிகள் திருப்பள்ளி எழுச்சி (Q).

__மேற்சொன்ன நூல்களை அருளியவர்கள்__ (A). ரிஷிகேசம் சிவாநந்தாச்ரமவாஸி, தேவபாஷா கவிபாஸ்கர ஸ்ரீ ஞாநாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள், (B). ப்ரஹ்மஸ்ரீ C.V.ஸ்வாமி சாஸ்த்ரிகள், (C). பாலகவி M.K.வேங்கடராமன், (D). தணிகைமணி வ.சு.செங்கல்வராய பிள்ளை, (E). ப்ரஹ்மஸ்ரீ E.V.வேங்கடஸுப்ரமண்யம், (F). காமாக்ஷிதாஸர் ப்ரஹ்மஸ்ரீ ஸோமஸுந்தரம் அய்யர், (G). ஆலவாய் க்ஷேத்ராம்ருத கவி ப்ரஹ்மஸ்ரீ A.R.சுப்பையர், (H). வள்ளிமலைத் திருப்புகழ் ஸ்வாமிகள் தொகுத்தருளியது, (J). திருச்செங்கோடு ப்ரஹ்மஸ்ரீ K.S.ராமஸ்வாமி சாஸ்த்ரிகள், (K). த்ராவிடக்கவிமணி ப்ரஹ்மஸ்ரீ முத்துஸ்வாமி அய்யர், (L). கவிராஜ பண்டித கநகராஜையர், (M). வரகவி யு.எம்.நடராஜ சர்மா, (N). பண்டிதரத்நம் T.S.ஸ்ரீநிவாஸாச்சாரியார், (P). முகவைக் கண்ண முருகனார், (Q). ஸ்வாமி ஞாநாநந்தா.

** ** **

# பிற்சேர்க்கை

# APPENDIX

"ஸற்குரு தாஸன்" பாலகவி எம்.கே.வேங்கடராமன் இயற்றிய

## மதுரை ஸ்ரீ பரிபூரண விநாயகர் திருப்பள்ளி எழுச்சி

(1961 -இல் இயற்றப் பெற்றது)

(உயிர் வர்க்க மாலை)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

அருள்ஒளிக் கதிரவன் அணைந்தனன் கீழ்பால்;
அகன்றது மாயையாம் பனியும்ஆ ரிருளும்;
உருள்பிறப் பின்கணே உழலும்இவ் வெளியேன்
உய்ந்திட நின்திரு முன்னர்வந் துள்ளேன்;
மருள்அற ஞானமாம் வானமு தருத்தி
மாண்புறு தவப்பயன் அளித்தணைத்(து) அருள்வான்
தெருள்மது ரைப்பரி பூரணப் பேர்கொள்
சிந்துரமே பள்ளி எழுந்தரு ளாயே. 1

ஆகமாம் கோயிலுள் அமர்ந்(து)அருள் விளக்கும்
ஆலவாய்ப் பரிபூர ணப்பெயர்த் தேவே!
யோகமா நெறியில் யோகியர் பலரும்
யுவர்களும் யுவதியர் குழாங்களும் விண்ணின்
போகமா தியவிழை சுரர்களும் முறையே
பூசைசெய் வோர்களும் போந்துநிற் கின்றார்

மோகமாம் தளையறுத் தின்பவாழ் வருள 2
  முன்னவனே! பள்ளி எழுந்தரு ளாயே. 2.

இதயதா மரையினை இனிதலர்த் திடவே
  எழுந்த(து) இளங்கதிர் இந்திரன் திசையில்;
முதல்நடு முடி(வு)இலா மூர்த்திநின் கோயில்
  முன்றிலில் அன்பர்கள் மொய்த்துநிற் கின்றார்;
சதமகன் அரிஅயன் உருத்திரா தியரும்
  சந்திரா தித்தரும் இயக்கர்கின் னரரும்
பதமலர் தரிசனைக் காகவந் துள்ளார்; 3
  *பரிபூரணா!* பள்ளி எழுந்தரு ளாயே. 3.

ஈடு சொலற்(கு)அரும் குரலினால் குயில்கள்
  இசைத்தன; மறையவர் இசைத்தனர் வேதம்;
பாடு படும்தொழி லாளிகள் எழுந்தே
  பற்பல தொழில்துறை நாடிச்செல் கின்றார்;
கேடு தவிர்கிரி குமரிசேய் என்றே
  கிளத்தினர் இன்னிசை கேழ்கிளர் நல்லார்;
வீடு தரும்*கண நாதா!*மெய்ஞ் ஞானம் 4
  விளக்கிடவே பள்ளி எழுந்தரு ளாயே. 4.

உன்னரும் நின்புகழ் ஓதினர் அடியார்;
  ஒலித்தன கோழியும் வலியனும் கொடியும்;
மன்னரும் வணிகரும் உழவரும் பிறரும்
  வந்துநின் றனர்திரு வாயிலின் கண்ணே;
நின்னடிப் போதைஎம் முடிமிசை சூட்டி
  நீள்அயன் எழுத்தினை அழித்தருள் புரிய
முன்னவ னே!மும் மலங்களைப் பொடிசெய் 5
  முக்கணனே! பள்ளி எழுந்தரு ளாயே. 5.

ஊன்அளித்(து) உயிர்கட்(கு) உணர்வுமிக் கூட்டி
  உலகுகள் தோறும்வைத் தோம்பும்உத் தமனே!
தேன்அமு(து) என்னமெய் அடியவர் உளத்தே
  தித்தித்(து) இலங்கிடும் திருவருட் கனியே!

வானமும் வையமும் எண்ணிலா உலகும்
வாழ்த்துகூ டற்பரி பூரணு கரனே!
யான்அற என(து)அற மனதினைத் திருத்தும் 6
இறையவனே! பள்ளி எழுந்தரு ளாயே. 6.

எல்லைஇ லாப்புக ழாளஇன் னியல்பார்
இரெட்டியப் பட்டிசா மிக்குமுன் தோன்றி
தொல்லை மறைகளின் நுண்பொருள் நொடியில்
சொல்லா(து) உணர்த்திஉள் துன்னுபூ ரணனே!
கல்லைஒத் துள்ளஎன் நெஞ்சமும் கரையக்
கனிமிகு நின(து)உருக் காட்டுதல் வேண்டும்;
முல்லைமல் லிகைஎருக்(கு) அறுகுசூ டிடும்எம் 7
மூர்த்தியே! நீபள்ளி எழுந்தரு ளாயே. 7.

ஏமனைக் காமனை வெல்லும்நல் வழிஓர்
எட்டுணை யேனும்இங்(கு) அறிகிலா நாயேன்
ஈமமே அணுகுதல் முறைகொலோ? நீசற்(று)
எனையும் திருத்திஆண்(டு) அருள்செயல் வேண்டும்
காமமும் கோபமும் களைஅருள் நெறியைக்
காட்டிநின் நாமமே கழறவைத் திடுவாய்
பூமகள் நாமகள் புகழ்எழில் மருகா! 8
பூரணனே! பள்ளி எழுந்தரு ளாயே. 8.

ஐந்து வகைப்பகை வோர்எனைச் சூழ்ந்தே
அனுதினம் ஆட்டும்ஆட் டம்சொலற் கெளிதோ?
விந்துவும் நாதமும் கலைகளும் துரிய
விளக்கமும் காட்டிமெய் யறிவுணர்த் திடுவாய்!
வந்(து)உனை யான்எழுப் பிடுவ(து)உண் மைகொலோ?
மையலுள் ஆழ்ந்(து)உறங்(கு) எனைஎழுப் பிடுவான்
சிந்துர முகதிரு உளத்தினிற் கொள்வாய் 9
சீரியனே! பள்ளி எழுந்தரு ளாயே. 9.

ஒன்றும்நான் அறிகிலன்; ஒன்றையும் செய்தற்(கு)
ஒருவகைத் திறலும்எற்(கு) இல்லை;ஈ(து) உண்மை;

என்றும்நான் உனக்(கு)அடி யான்எனக் குறித்தாய்!
அன்றுதொட்(டு) இன்றுகா(று) உன்னதே எல்லாம்;
என்றுமூ வேடணைத் தொடர்(பு)அறுப் பாயோ?
என்றுநின் சேவடிப் பே(று)அருள் வாயோ?
இன்றுநற் றருணம்;நீ இன்னருள் புரிவாய்! 10
ஏகனே! நீபள்ளி எழுந்தரு ளாயே. 10.

ஓசை எழுத்(து)உரை நூல்பொருள் அனைத்தும்
உன்மய மேஎனல் உண்மையாம்; என்உள்
மாசை அகற்றிட நாடிடா நாயேன்
மனதைத் திருத்திமெய் அறி(வு) உணர்த் திடுவாய்!
ஆசை எனும்கொடும் பேயைத் துரத்தி
அன்பைஉள் நிறுவிமெய் இன்பம் புணர்ப்பாய்!
பூசை புரிபவர்க்(கு) இன்னருள் செய்யும் 11
பூரணனே! பள்ளி எழுந்தரு ளாயே. 11.

ஔவைநன் குறையூர் நம்பிமெய் கண்டார்க்(கு)
அருளிய வா(று)எனை அழைத்(து)அருள் புரிவாய்!
செவ்விய பன்மலர் பொற்குடம் தூபம்
தீபமொ(டு) ஆடிகொண்(டு) அன்பர்நிற் கின்றார்
திவ்விய திருமுறை ஓதுநர் குழல்யாழ்
தெரிப்பவர் இயம்பல துவைப்பவர் சூழ்ந்தார்
எவ்வுயி ருக்கும்எந் நலமும்ஈந்(து) அருளும் 12
இன்துணைவா! பள்ளி எழுந்தரு ளாயே. 12.

வாழிதென் மதுரையும் வையைமா நதியும்!
வாழிசொக் கேசர்மீ நாட்சிஆ லயமும்!
வாழிஎன் பூர்ணவி நாயகர் கோயில்!
வாழிநற் றமிழகம்! வாழிமெய் அடியார்!
வாழிபைந் தமிழ்மொழி! வாழிநற் புலவோர்!
வாழிமெய்ப் பத்திமெய்ஞ் ஞானம்மெய் இன்பம்!
வாழிநன் பேரருள்! வாழிசன் மார்க்கம்! 13
வாழிஓம் எனும்மொழி! வாழிவை யகமே! 13.

(மதுரை ஸ்ரீ பரிபூரண விநாயகர் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் அருளிய

# திருப்போரூர் முருகன் திருப்பள்ளி எழுச்சி

(எண் சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

திருமலி குணதிசை அருணன்நல் உதயம்
 செய்தனன்; இருவினைச் சமமல பாகப்
பருவம துடையவர் தமதுளம் எனவே
 பாரகம் விளங்கின; அவர்குணக் கிரிமேல்
அருள்ஒளி வீசிநின் றிலகுமுன் பதம்போல்
 அருக்கனும் குணதிசைப் பொருப்பெழு கின்றான்
இருள்அறு குறுமுனி பரவிய *போரூர்* 14
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 1.

ஆடுறு மணிமயில் *சிறைவிரித்(து)* அதன்மேல்
 அருளொளி திகழந் எழுந்தருள் முறைபோல்
பீடுறு மரகதக் குரகதம் பூண்ட
 பெருந்தடம் தேர்மிசை எழுந்தனன் கதிரோன்
வாடுறு தாமரை நினதருள் அடைந்த
 மாதவர் முகம்என மலர்ந்தன எங்கும்
ஏடவிழ் மலர்ப்பொழில் பொதுளிய *போரூர்* 15
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 2.

பகர்அரு சுடர்விடும் உனதயில் கண்ட
 பதகர்தம் மனம்எனச் சுரர்மனம் எனவே
புகர்உடு மழுங்கின விகசிதம் ஆகிப்
 பொலிந்தன முளரிகள் தடந்தொறும்; உனது
திகழ்பதம் அடைந்தவர் உயிர்ச்சிறு போதம்
 தேய்ந்தென மதியொளி தேய்ந்தது; குணபால்

இகல்அறு கதிர்எழு கின்றது *போரூர்* 16
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 3.

என்றனைக் கைப்பிடித்(து) ஆளுறும் இறைவன்
 எழில்பெறு மலர்விழி மலர்ந்தெழு சமயம்
உன்றன துளவிருள் போக்குவன் நோக்கால்
 ஒல்லையில் வருகென எல்லினைக் கூவி
நின்றன திருக்கொடி அழைத்துறு முறைபோல்
 நீடுறு மனைதொறும் கூவின; மிகவும்
இன்றெனை ஆண்டுகொண்(டு) அருளிய *போரூர்* 17
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 4.

மன்மதன் விருதுகள் ஊதின பொழில்வாய்
 மாயவன் கரப்படை தொனித்ததுன் எதிரே;
தென்மலி மலரவன் ஊர்திகள் நடத்துச்
 சிலம்பின; நின்கொடி பதஎச் சரிக்கை
பன்முறை பண்ணுவ போல்மனை தோறும்
 பாழியங் குரலொலி காட்டின; அருளால்
என்மல இருள்தெறும் ஆரிய! *போரூர்* 18
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 5.

கின்னரர் கிம்புரு டர்களொடு கெருடர்
 கெந்தரு வர்கள்சித்தர் வித்தியா தரரும்
மன்னிய முரசதிர் சிகரியின் வாய்தல்
 வந்தனர் ஐந்தெழில் வாத்தியம் தொனித்தார்
பொன்னில மடவார் இந்நில மடவார்
 புரிந்தனர் நாடகம் இருந்தகை மயில்போல்
இன்னருள் பொழிமுகி லே!*திருப் போரூர்* 19
 இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 6.

வானவர் புகழ்நவ வீரர்கள் ஒருபால்
 மால்வரை யனகண நாதர்கள் ஒருபால்
தீனமில் எண்டிசைப் பாலகர் ஒருபால்
 தேவர்கள் முனிவர்கள் பாதலர் ஒருபால்

தானம துதவிய கரங்கொடு பாரி
ஜாதநன் மலர்மழை பொழிந்தனர் பணிந்தே
ஏனலம் புனம்மலி சாரலம் *போரூர்* 20
இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 7.

மறைமுடி உணர்ந்தவர் மறையவர் அடியார்
வருபரி சாரகர் அரசர்கள் வணிகர்
குறைவறு வளவர்கள் மற்றுளர் எவரும்
குழுமியே வடமொழி தென்மொழிப் பாவால்
நிறைதய வுடன்நினைப் புகழ்ந்துநின் றேத்தி
நீளுறு தண்டெனப் பணிந்தெழு கின்றர்
எறிமணி அருவிகள் சொரிகிரிப் *போரூர்* 21
இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 8.

விலையறு நவமணி மாலைகள் கொணர்ந்தார்
வெயில்விடு குலிசகே யூரங்கள் கொணர்ந்தார்
அலகறு மணிசெறி மகுடங்கள் கொணர்ந்தார்
ஆழிம தாணிகள் நூபுரம் கொணர்ந்தார்
நிலைபெறு கவிர்இதழ் நேத்திரம் கொணர்ந்தார்
நிறைந்துளம் வேண்டிய பெறஉறப் பணிந்தார்
எலையறு பெருவரம் அருள்செயப் *போரூர்* 22
இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 9.

ஐங்கரம் கொடுதழு வுறநினை ஒருகொம்(பு)
ஆனைஉள் மகிழ்ந்தது; முக்கணம் பொருப்புன்
பங்கய முகஅணி கண்டுகண் களிப்பப்
பரிவொடு நினைந்தது; பனிவரை உயிர்த்த
செங்கயல் விழிப்பசும் பிடிநினை மடிமேல்
சேர்த்தருட் பால்தரத் திருவுளத் துனும்;ஈண்(டு)
எங்களை ஆண்டுகொண்(டு) அருளிய *போரூர்* 23
இறையவ னே!பள்ளி எழுந்தரு ளாயே! 10.

(திருப்போரூர் முருகன் திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் அருளிச் செய்த



# திருவெம்பாவை

(வெண்டளையான் வந்த
இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா)

ராகம்: பூபாளம்　　தாளம்: ஆதி

திருச்சிற்றம்பலம்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டு) இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்என் னேஎன்னே　　24
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்.　　1.

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போ(து)இப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசீ இவையும் சிலவோ விளையாடி
ஏசும் இடம்ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்　　25
ஈசனார்க்(கு) அன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய்.　　2.

முத்தன்ன வெண்நகையாய் முன்வந்(து) எதிர்எழுந்(து)என்
அத்தன் ஆனந்தன் அமுதன்என்(று) அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த்(து) ஆட்கொண்டாற் பொல்லாதோ?
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை　　26
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்.　　3.

ஒள்நித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றே
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்(கு) ஒருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்(கு) இனியானைப் பாடிக் கசிந்(து)உள்ளம்
உள்நெக்கு நின்(று)உருக யாம்மாட்டோம் நீயேவந்(து) 27
எண்ணிக் குறைஇல் துயில் ஏலோர் எம்பாவாய். 4.

மால்அறியா நான்முகனும் காணா மலையினைநாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனேஎன்(று)
ஓலம் இடினும் உணராய் உணராய்காண் 28
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய். 5.

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றே
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானேவந்(து) எம்மைத் தலையளித்(து)ஆட் கொண்(டு)அருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்(கு)உன் வாய்திறவாய்
ஊனே உருகாய் உனக்கே உறும்எமக்கும் 29
ஏனோர்க்கும் தம்கோனைப் பாடேலோர் எம்பாவாய். 6.

அன்னே இவையும் சிலவோ பலஅமரர்
உன்னற்(கு) அரியான் ஒருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவன்என்றே வாய்திறப்பாய்
தென்னாஎன் னாமுன்னம் தீசேர் மெழு(கு)ஒப்பாய்
என்னானை என்னரையன் இன்னமு(து)என்(று) எல்லோமும்
சொன்னோம்கேள் வெவ்வேறாய் இன்னம் துயிலுதியோ

வன்நெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால் 30
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய். 7.

கோழி சிலம்பச் சிலம்பும் குரு(கு)எங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்(கு)எங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம் கேட்டிலையோ
வாழி!ஈ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை 31
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய். 8.

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்(கு)அவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எம்கணவர் ஆவார் அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்(கு)எம்கோன் நல்குதியேல் 32
என்ன குறையும் இலோம்ஏலோர் எம்பாவாய். 9.

பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டர்உளன்
கோதில் குலத்(து)அரன்தன் கோயில் பிணாப்பிள்ளைகாள்
ஏ(து)அவன்ஊர் ஏ(து)அவன்பேர் ஆர்உற்றார் ஆர்அயலார்
ஏ(து)அவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய். 10.

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேர்என்னக்
கையால் குடைந்து குடைந்(து)உன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோம்காண் ஆர்அழல்போல்
செய்யா!வெண் ணீ(று)ஆடி செல்வா சிறுமருங்குல்

மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆட்கொண்(டு) அருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகைஎல்லாம் உய்ந்(து)ஒழிந்தோம் 34
எய்யாமல் காப்பாய் எமையேலோர் எம்பாவாய். 11.

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்(து)ஆடும்
தீர்த்தன்நல் தில்லைச்சிற் றம்பலத்தே தீஆடும்
கூத்தன்இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்(டு)ஆர்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்(து)உடையான் பொற்பாதம் 35
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய். 12.

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கண் மலம்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எம்கோனும் போன்(று)இசைந்த
பொங்கும் மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்(து)ஆர்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப் 36
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய். 13.

காதார் குழைஆடப் பைம்பூண் கலன்ஆடக்
கோதை குழல்ஆட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருள்ஆ மாபாடிச்
சோதித் திறம்பாடி சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதித் திறம்பாடி அந்தம்ஆ மாபாடி
பேதித்து நம்மை வளர்த்(து)எடுத்த பெய்வளைதன் 37
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய். 14.

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாய்ஓவாள் சித்தம் களிகூர

நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்
பேரரையற்(கு) இங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி 38
ஏருருவப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய். 15.

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்(து)எம்மை ஆளுடையாள் இட்டிடையின்
பின்னிப் பொலிந்(து)எம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னில் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே 39
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய். 16.

செங்கண் அவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட்(கு) ஆரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப் 40
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய். 17.

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்(று)இறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப் 41
பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர் எம்பாவாய். 18.

உங்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்என்(று)
அங்(கு)அப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்(கு)ஒன்(று) உரைப்போம்கேள்
எங்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்(கு)அல்லா(து) எப்பணியும் செய்யற்க
கங்குல் பகல்எம்கண் மற்றொன்றும் காணற்க
இங்(கு)இப் பரிசே எமக்(கு)எம்கோன் நல்குதியேல் 42
எங்(கு)எழில்என் ஞாயி(று) எமக்கேலோர் எம்பாவாய். 19.

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றிஎல் லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்(டு)அருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய். 20.

திருச்சிற்றம்பலம்

(மாணிக்கவாசகர் அருளிய திருவெம்பாவை முற்றும்)



ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் அருளிச் செய்த

# திருப்பள்ளி எழுச்சி

(எண் சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி



திருச்சிற்றம்பலம்

**போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே**
புலர்ந்தது பூங்கழற்(கு) இணைதுணை மலர்கொண்(டு)
ஏற்றிநின் திருமுகத்(து) எமக்(கு)அருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கண் மலரும்தண் வயல்சூழ்
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே*
ஏற்றுயர் கொடியுடை யாய்எனை யுடையாய் 44
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 1.

அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணும்
திரள்நிரை அறுபதம் முரல்வன இவையோர்
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!*
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே! 45
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே. 2.

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்(து)
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே*
யாவரும் அறிவரி யாய்எமக்(கு) எளியாய் 46
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 3.

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
*திருப்பெருந் துறையுறை* சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண்(டு) இன்னருள் புரியும் 47
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4.

பூதங்கள் தோறும்நின் றாய்எனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயல்*திருப் பெருந்துறை* மன்னா!
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்(து)
ஏதங்கள் அறுத்(து)எம்மை ஆண்டருள் புரியும் 48
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5.

பப்பற வீட்டிருந்(து) உணரும்நின் அடியார்
பந்தனை வந்(து)அறுத் தார்அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா!
செப்புறு கமலங்கண் மலரும்தண் வயல்சூழ்
*திருப்பெருந் துறையுறை* சிவபெரு மானே
இப்பிறப்(பு) அறுத்(து)எமை ஆண்(டு)அருள் புரியும் 49
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 6.

அதுபழச் சுவைஎன அமு(து)என அறிதற்(கு)
அரி(து)என எளி(து)என அமரரும் அறியார்
இதுஅவன் திருஉரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண்(டு) இங்(கு)எழுந்(து) அருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கைஉள் ளாய்!*திருப் பெருந்துறை* மன்னா!

எதுஎமைப் பணிகொளு மா(று?)அது கேட்போம் 50
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 7.

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந்(து) அருளிய பரனே!
செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்
*திருப்பெருந் துறையுறை* கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந்(து) ஆண்டாய் 51
ஆரமு தே!பள்ளி எழுந்தரு ளாயே. 8.

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளே!உன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே!
வண்*திருப் பெருந்துறை* யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே!
கடலமு தே!கரும் பே!விரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்(கு)உயி ரானாய் 52
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 9.

புவனியில் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேஇந்தப் பூமி
*சிவன்உய்யக்* கொள்கின்ற வா(று)என்று நோக்கித்
*திருப்பெருந் துறையுறை* வாய்!திரு மாலாம்
அவன்விருப்(பு) எய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்(து)எமை ஆட்கொள்ள வல்லாய்! 53
ஆரமு தே!பள்ளி எழுந்தரு ளாயே. 10.

*திருச்சிற்றம்பலம்*

(ஸ்ரீ மாணிக்கவாசகர் அருளிய திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார்
அருளிச் செய்த



# திருப்பள்ளி எழுச்சி

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)
ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
 கனையிருள் அகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந்(து) ஒழுகின மாமலர் எல்லாம்
 வானவர் அரசர்கள் வந்துவந்(து) ஈண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
 இருங்களிற்(று) ஈட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுள(து) எங்கும் 54
 அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 1.

கொழுங்கொடி முல்லையின் கொழுமலர் அணவிக்
 கூர்ந்தது குணதிசை மாருதம் இதுவோ!
எழுந்தன மலரணைப் பள்ளிகொள் அன்னம்
 ஈன்பனி நனைந்ததம் இருஞ்சிற(கு) உதறி
விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்
 வெள்ளெயி(று) உறஅதன் விடத்தினுக்(கு) அனுங்கி
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த 55
 அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 2.

சுடரொளி பரந்தன சூழ்திசை எல்லாம்
 துன்னிய தாரகை மின்னொளி சுருங்கி
படரொளி பசுத்தனன் பனிமதி இவனோ!
 பாயிருள் அகன்றது பைம்பொழில் கமுகின்
மடலிடைக் கீறிவண் பாளைகள் நாற
 வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ
அடலொளி திகழ்தரு திகிரியந் தடக்கை 56
 அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 3.

மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்கள்
வேய்ங்குழல் ஓசையும் விடைமணிக் குரலும்
ஈட்டிய இசைதிசை பரந்தன வயலுள்
இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை
வாட்டிய வரிசிலை வானவர் ஏறே!
மாமுனி வேள்வியைக் காத்துஅவ பிரதம்
ஆட்டிய அடுதிறல் அயோத்திஎம் அரசே! 57
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 4.

புலம்பின புட்களும் பூம்பொழில் களின்வாய்
போயிற்றுக் கங்குல் புகுந்தது புலரி
கலந்தது குணதிசைக் கனைகடல் அரவம்
களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கலம் தொடையல்கொண்(டு) அடியிணை பணிவான்
அமரர்கள் புகுந்தனர் ஆதலில் அம்மா
இலங்கையர் கோன்வழி பாடுசெய் கோயில் 58
எம்பெரு மான்!பள்ளி எழுந்தரு ளாயே. 5.

இரவியர் மணிநெடுந் தேரொடும் இவரோ!
இறையவர் பதினொரு விடையரும் இவரோ!
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ!
மருதரும் வசுக்களும் வந்துவந்(து) ஈண்டி
புரவியோ(டு) ஆடலும் பாடலும் தேரும்
குமரதண் டம்புகுந்(து) ஈண்டிய வெள்ளம்
அருவரை அனையநின் கோயில்முன் இவரோ! 59
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 6.

அந்தரத்(து) அமரர்கள் கூட்டங்கள் இவையோ!
அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ!
இந்திரன் ஆனையும் தானும்வந்(து) இவனோ!
எம்பெரு மான்உன கோயிலின் வாசல்
சுந்தரர் நெருக்கவிச் சாதரர் நூக்க
இயக்கரும் மயங்கினர் திருவடி தொழுவான்

அந்தரம் பாரிடம் இல்லைமற்(று) இதுவோ? 60
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 7.

வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க
மாநிதி கபிலையொண் கண்ணாடி முதலா
எம்பெரு மான்படி மக்கலம் காண்டற்(கு)
ஏற்பன வாயின கொண்டுநன் முனிவர்
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ!
தோன்றினன் இரவியும் துலங்கொளி பரப்பி
அம்பர தலத்தில்நின்(று) அகல்கின்ற(து) இருள்போய் 61
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 8.

ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழவமோ(டு) இசைதிசை கெழுமி
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்
கெந்தரு வர்அவர் கங்குலுள் எல்லாம்
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயங்கினர் திருவடி தொழுவான்
ஆதலில் அவர்க்குநா ளோலக்கம் அருள 62
அரங்கத்தம் மா!பள்ளி எழுந்தரு ளாயே. 9.

கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன இவையோ!
கதிரவன் கனைகடல் முளைத்தனன் இவனோ!
துடியிடை யார்சுரி குழல்பிழிந்(து) உதறித்
துகிலுடுத்(து) ஏறினர் சூழ்புனல் அரங்கா!
தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள்தொண்ட ரடிப்பொடி என்னும்
அடியனை அளியன்என்(று) அருளிஉன் அடியார்க்(கு) 63
ஆட்படுத் தாய்!பள்ளி எழுந்தரு ளாயே. 10.

(தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

ஸ்ரீ ஆண்டாள் நாச்சியார் அருளிச் செய்த

# திருப்பாவை



(வெண்டளையான் வந்த
இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா)

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான் (ராகம்: நாட்டை)
நாரா யணனே நமக்கே பறைதருவான் 64
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய். 1.

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்(டு) எழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளைச் சென்றோதோம் (கௌளை)
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி 65
உய்யுமா(று) எண்ணி உகந்தேலோர் எம்பாவாய். 2.



ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயல்உகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி (ஆரபி)
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள் 66
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய். 3.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ(டு) ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பத்மநா பன்கையில்

ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்(று)அதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல் (வராளி)
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் 67
மார்கழிநீர் ஆட மகிழ்ந்தேலோர் எம்பாவாய். 4.

மாயனை மன்னும் வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப் (ஸ்ரீ ராகம்)
போய பிழையும் புகுதருவான் நின்றனவும் 68
தீயினில் தூ(சு)ஆகும் செப்பேலோர் எம்பாவாய். 5.

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ!
பிள்ளாய்! எழுந்திராய்! பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத்(து) அரவில் துயில்அமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும் (சங்கராபரணம்)
மெள்ள எழுந்(து)அரி(கு) 'அரி'என்ற பேரரவம் 69
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய். 6.

கீசுகீ(சு) என்(று)எங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்(சு)அரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி (பைரவி)
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ? 70
தேசம் உடையாய் திறவேலோர் எம்பாவாய். 7.

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப் போகாமல் காத்(து)உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் கோது கலம்உடைய
பாவாய்! எழுந்திராய்; பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய (தன்யாஸி)

தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால் 71
ஆவாஎன்(று) ஆராய்ந்(து) அருளேலோர் எம்பாவாய். 8.

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்(கு)எரியத்
தூமம் கமழத் துயில்அணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்;
மாமீர்! அவளை எழுப்பீரோ? உம்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ? (ஹமீர்கல்யாணி)
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று 72
நாமம் பலவும் நவின்றேலோர் எம்பாவாய். 9.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்;
நாற்றத் துழாய்முடி நாரா யணன்நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்(டு)ஒருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ? (தோடி)
ஆற்ற அனந்தல் உடையாய்! அருங்கலமே 73
தேற்றமாய் வந்து திறவேலோர் எம்பாவாய். 10.

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறல்அழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன்(று) இல்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றர வல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச் (உசேநி)
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டிநீ 74
எற்றுக்(கு) உறங்கும் பொருளேலோர் எம்பாவாய். 11.

கனைத்(து)இளம் கற்(று)எருமை கன்றுக்(கு) இரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்(து)இல்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்

சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்(கு) இனியானைப் பாடவும்நீ வாய்திறவாய்! (கேதாரகௌளை)
இனித்தான் எழுந்திராய்! ஈதென்ன பேர்உறக்கம்? 75
அனைத்(து)இல்லத் தாரும் அறிந்தேலோர் எம்பாவாய். 12.

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே (அடாணா)
பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால் 76
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோர் எம்பாவாய். 13.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்(து) ஆம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய்; நாணாதாய்! நாவுடையாய்! (ஆநந்தபைரவி)
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் 77
பங்கயக் கண்ணானைப் பாடேலோர் எம்பாவாய். 14.

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?
சில்லென்(று) அழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன்
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாய்அறிதும்
வல்லீர்கள் நீங்களே! நானேதான் ஆயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ போந்தார்போந் தெண்ணிக்கொள் (பேகட)
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க 78
வல்லானை மாயனைப் பாடேலோர் எம்பாவாய். 15.

நாயகனாய் நின்றநந்த கோப னுடைய
கோயில்காப் பானே கொடித்தோன்றுந் தோரண

வாயில்காப் பானே! மணிக்கதவம் தாள்திறவாய்;
ஆயர் சிறுமிய ரோமுக்(கு) அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயில்எழப் பாடுவான் (மோஹநம்)
வாயால்முன் னம்முன்னம் மாற்றாதே அம்மாநீ 79
நேய நிலைக்கதவம் நீக்கேலோர் எம்பாவாய். 16.

அம்பரமே தண்ணீரே சோறே அறம்செய்யும்
எம்பெருமான் நந்தகோ பாலா எழுந்திராய்!
கொம்பனார்க்(கு) எல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்
அம்பரம் ஊடறுத்(து) ஓங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்கா(து) எழுந்திராய்! (கல்யாணி)
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா! 80
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய். 17.

உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்! மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்!
பந்தார் விரலி!உன் மைத்துனன் பேர்பாட (ஸாவேரி)
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப 81
வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய். 18.

குத்து விளக்(கு)எரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்;
மைத்தடங் கண்ணினாய்! நீஉன் மணாளனை
எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய்காண்; (ஸஹானா)
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால் 82
தத்துவம் அன்று தகவேலோர் எம்பாவாய். 19.

முப்பத்து மூவர் அமரர்க்கும் முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்!
செப்பம் உடையாய்! திறல்உடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்!
செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்; (செஞ்சுருட்டி)
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை 83
இப்போதே எம்மைநீ ராட்டேலோர் எம்பாவாய். 20.

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்
ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்;
மாற்றார் உனக்கு வலிதொலைந்(து)உன் வாசற்கண் (நாதநாமக்ரியா)
ஆற்றாது வந்துன் அடிபணியு மாப்போலே 84
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோர் எம்பாவாய். 21.

அங்கண்மா ஞாலத்(து) அரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல் (யமன்கல்யாணி)
அங்கண் இரண்டும்கொண்(டு) எங்கள்மேல் நோக்குதியேல் 85
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோர் எம்பாவாய். 22.

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாஉன்
கோயில்நின்(று) இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய (பிலஹரி)

சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த 86
காரியம் ஆராய்ந்(து) அருளேலோர் எம்பாவாய். 23.

அன்(று)இவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி
சென்(று)அங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய்! கழல்போற்றி
குன்று குடையா எடுத்தாய்! குணம்போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி (சிந்துபைரவி)
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான் 87
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய். 24.

ஒருத்தி மகனாய்ப் பிறந்(து)ஓர் இரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில் (பெஹாக்)
திருத்தக்க செல்வமும் சேவகமும்யாம் பாடி 88
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய். 25.

மாலே! மணிவண்ணா! மார்கழிநீர் ஆடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச ஜ(ன்)னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா(டு) உடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண்(டு) இசைப்பாரே (குந்தலவராளி)
கோல விளக்கே! கொடியே! விதானமே! 89
ஆலின் இலையாய் அருளேலோர் எம்பாவாய். 26.

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே

பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பாற்சோறு (பூர்விகல்யாணி)
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக் 90
கூடி இருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய். 27.

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந்(து) உண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்(து)உன் தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்(கு)இங்(கு) ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால்உன் தன்னைச் (காம்போதி)
சிறுபேர் அழைத்தனவும் சீறிஅரு ளாதே 91
இறைவா!நீ தாராய் பறையேலோர் எம்பாவாய். 28.

சிற்றஞ் சிறுகாலே வந்(து)உன்னைச் சேவித்(து)உன்
பொற்று மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்(து) உண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோ(டு) (மத்யமாவதி)
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம் 92
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய். 29.

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்(று)இறைஞ்சி
அங்கப் பறைகொண்ட ஆற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள் (சுருட்டி)
செங்கட் திருமுகத்துச் செல்வத் திருமாலால் 93
எங்கும் திருவருள்பெற்(று) இன்புறுவர் எம்பாவாய். 30.

(ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை முற்றும்)

வடலூர் வள்ளலார் ஸ்ரீ ராமலிங்க அடிகள் அருளிய

# அருட்பெருஞ்சோதி திருப்பள்ளி எழுச்சி

(எண் சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

**பொழுது விடிந்த(து);என் உள்ளமென் கமலம்**
**பூத்தது; பொன்னொளி பொங்கிய(து) எங்கும்;**
**தொழுதுநிற் கின்றனன்; செய்பணி எல்லாம்**
**சொல்லுதல் வேண்டும்என் வல்லசற் குருவே!**
**முழுதும் ஆனுன்என ஆகம வேத**
**முறைகள்எல் லாம்மொழி கின்றமுன் னவனே!**
**எழுதுதற்(கு) அரியசீர் *அருட்பெருஞ் சோதி* !** 94
**என்தந்தை யே!பள்ளி எழுந்தருள் வாயே!** 1.

**துற்குண மாயைபோய்த் தொலைந்தது; ஞானம்**
**தோன்றிடப் பொன்னொளி தோற்றிய கதிர்தான்**
**சிற்குண வரைமிசை உதயம்செய் ததுமா**
**சித்திகள்; அடிப்பணி செய்திடச் சூழ்ந்த**
**நற்குண சன்மார்க்க சங்கத்தார் எல்லாம்**
**நண்ணினர்; தோத்திரம் பண்ணிநிற் கின்றார்;**
**எற்(கு)உண(வு) அளித்தஎன் *அருட்பெருஞ் சோதி* !** 95
**என்னம்மை யே!பள்ளி எழுந்தருள் வாயே!.** 2.

**நிலம்தெளிந் தது;கணம் மழுங்கின; சுவணம்**
**நீடொளி தோன்றிற்று; கோடொலிக் கின்ற;**
**அலர்ந்தது தாமரை; ஆணவ இருள்போய்**
**அழிந்தது; கழிந்தது மாயை;மால் இரவு**
**புலர்ந்தது; தொண்டரோ(டு) அண்டரும் கூடிப்**
**போற்றியோ சிவசிவ போற்றிஎன் கின்றார்;**
**இலங்குரு அளித்தஎன் *அருட்பெருஞ் சோதி* !** 96
**என்குரு வே!பள்ளி எழுந்தருள் வாயே!** 3.

கல்லாய மனங்களும் கரையப்பொன் னொளிதான்
    கண்டது; கங்குலும் விண்டது; தொண்டர்
பல்லாரும் எய்தினர்; பாடிநின்(று) ஆடிப்
    பரவுகின் றார்;அன்பு விரவுகின் றாரய்
நல்லார்மெய்ஞ் ஞானிகள் யோகிகள் பிறரும்
    நண்ணினர்; சூழ்ந்தனர்; புண்ணிய நிதியே!
எல்லாம்செய் வல்லஎன் *அருட்பெருஞ் சோதி* ! 97
    என்தெய்வ மே!பள்ளி எழுந்தருள் வாயே! 4.

புன்மாலை இரவெலாம் புலர்ந்தது; ஞானப்
    பொருப்பின்மேல் பொற்கதிர் புலர்ந்தது; புலவோர்
சொன்மாலை தொடுத்தனர்; துதித்துநிற் கின்றார்
    சுத்தசன் மார்க்கசங் கத்தவர் எல்லாம்;
மன்மாலை மாலையா வந்துசூழ் கின்றார்;
    வானவர் நெருங்கினர்; வாழிஎன் கின்றார்;
என்மாலை அணிந்தஎன் *அருட்பெருஞ் சோதி* ! 98
    என்பதி யே!பள்ளி எழுந்தருள் வாயே! 5.

ஒருமையின் உலகெலாம் ஓங்குக எனவே
    ஊதின *சின்னங்கள்* ஊதின *சங்கம்*
பெருமைகொள் *சமரச* சுத்தசன் மார்க்கப்
    பெரும்புகழ் பேசினர் பெரியவர் சூழ்ந்தார்
அருமையும் எளிமையும் ஆகிஅன் றாகி
    அம்பலத் தே*சித்தி* ஆடல்செய் பதியே!
இருமையும் அளித்தஎன் *அருட்பெரும் சோதி* ! 99
    என்னர சே!பள்ளி எழுந்தருள் வாயே!. 6.

*சி*னைப்பள்ளித் தாமங்கள் கொணர்ந்தனர் அடியார்;
    *சிவசிவ* போற்றிஎன்(று) உவகைகொள் கின்றார்;
நினைப்பள்ளி உண்ணத்தெள் ளாரமு(து) அளிக்கும்
    நேரம்இந் நேரம்என்(று) ஆரியர் புகன்றார்;
முனைப்பள்ளி பயிற்று(து)என் றனைக்கல்வி பயிற்றி
    முழுதுணர் வித்துடற் பழுதெலாம் தவிர்த்தே

எனைப்பள்ளி எழுப்பிய *அருட்பெருஞ் சோதி !* 100
என்னப் பனே!பள்ளி எழுந்தருள் வாயே! 7.

மதம்பிடித் தவரெல்லாம் வாய்பிடிப் புண்டு
வந்துநிற் கின்றனர் வாய்திறப் பிப்பான்
கதம்பிடித் தவரெல்லாம் கடும்பிணி யாலே
கலங்கினர் சூழ்ந்தனர் உலம்புறு கின்றார்
பதம்பிடித் தவரெல்லாம் அம்பலப் பாட்டே
பாடினர் ஆடினர் பரவிநிற் கின்றார்
இதம்பிடித்(து) எனைஆண்ட *அருட்பெருஞ் சோதி !* 101
என்னைய னே!பள்ளி எழுந்தருள் வாயே! 8.

மருளொடும் மாயைபோய்த் தொலைந்(து)அறு மதங்கள்
வாய்மூடிக் கொண்டன; மலர்ந்தது கமலம்;
அருள்ஒளி விளங்கிய(து) ஒருதிருச் சபையும்
அலங்கரிக் கின்றனர் துலங்கிவீற் றிருக்கத்
தெருளொடும் பொருளும்மேல் மேலெனக் களித்துச்
சித்தெலாம் செய்திடத் திருவருள் புரிந்தே
இருள்அறுத்(து) எனைஆண்ட *அருட்பெருஞ் சோதி !* 102
என்வள்ள லே!பள்ளி எழுந்தருள் வாயே! 9.

அலங்கரிக் கின்றும்ஓர் திருச்சபை; அதிலே
அமர்ந்(து)அருட் சோதிகொண்(டு) அடிச்சிறி யோமை
வலம்பெறும் இறவாத வாழ்வில்வைத் திடவே
வாழ்த்துகின் றோம்;முன்னர் வணங்கிநிற் கின்றோம்;
விலங்கிய(து) இருளெலாம்; விடிந்தது பொழுது;
விரைந்(து)எமக்(கு) அருளுதல் வேண்டும்;இத் தருணம்
இலங்குதல் தருணம்;எம் *அருட்பெருஞ் சோதி !* 103
எம்தந்தை யே!பள்ளி எழுந்தருள் வாயே! 10.

(அருட்பெருஞ்சோதி திருப்பள்ளி எழுச்சி முற்றும்)



மஹாகவி பாரதியார் அருளிச் செய்த

# பாரத மாதா
# திருப்பள்ளி எழுச்சி

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

ராகம்: பூபாளம் தாளம்: ஆதி

பொழுது புலர்ந்தது யாம்செய்த தவத்தால்
புன்மை இருட்கணம் போயின யாவும்
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
எழுந்து விளங்கிய(து) அறிவுஎனும் இரவி
தொழு(து)உனை வாழ்த்தி வணங்குதற்(கு) இங்(கு)உன்
தொண்டர்பல் லாயிரர் சூழ்ந்துநிற் கின்றோம்
விழிதுயில் கின்றனை இன்னும்எந் தாயே! 104
வியப்(பு)இது காண்!பள்ளி எழுந்தரு ளாயே!. 1.

புள்ளினம் ஆர்த்தன ஆர்த்தன முரசம்
பொங்கிய(து) எங்கும் சுதந்திர நாதம்
வெள்ளிய சங்கம் முழங்கின கேளாய்!
வீதிஎ லாம்அணு குற்றனர் மாதர்
தெள்ளிய அந்தணர் வேதமும் நின்றன்
சீர்த்திரு நாமமும் ஓதிநிற் கின்றார்
அள்ளிய தெள்ளமு(து) அன்னைஎம் அன்னை 105
ஆருயி ரே!பள்ளி எழுந்தரு ளாயே!. 2.

பருதியின் பேரொளி வானிடைக் கண்டோம்
பார்மிசை நின்ஒளி காணுதற்(கு) அலந்தோம்
கருதிநின் சேவடி அணிவதற்(கு) என்றே
கனிவுறு நெஞ்சக மலர்கொடு வந்தோம்
சுருதிகள் பயந்தனை சாத்திரம் கோடி
சொல்லரு மாண்பின ஈன்றனை அம்மே!
நிருதர்கள் நடுக்குறச் சூல்கரத்(து) ஏற்றாய்! 106
நிர்மலை யே!பள்ளி எழுந்தரு ளாயே!. 3.

நின்எழில் விழிஅருள் காண்பதற்(கு) எங்கள்
　　நெஞ்சகத்(து) ஆவலை நீஅறி யாயோ?
பொன்னனை யாய்!வெண் பனிமுடி இமையப்
　　பொருப்பினன் ஈந்த பெருந்தவப் பொருளே!
என்ன தவங்கள்செய்(து) எத்தனை காலம்
　　ஏங்குவம் நின்அருட்(கு) ஏழையம் யாமே?
இன்னமும் துயிலுதி யேல்இது நன்றோ? 107
　　இன்னுயி ரே!பள்ளி எழுந்தரு ளாயே!. 4.

மதலையர் எழுப்பவும் தாய்துயில் வாயோ?
　　மாநிலம் பெற்றவள் இஃதுண ராயோ?
குதலை மொழிக்(கு)இரங் காதொரு தாயோ?
　　கோமக ளே!பெரும் பாரதர்க்(கு) அரசே!
விதமுறு நின்மொழி பதினெட்டும் கூறி
　　வேண்டிய வா(று)உனைப் பாடுதும் காணாய்!
இதமுற வந்(து)எமை ஆண்(டு)அருள் செய்வாய்! 108
　　ஈன்றவ ளே!பள்ளி எழுந்தரு ளாயே!. 5.

(பாரதியார் அருளிய பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி முற்றும்)

*பிற்சேர்க்கை (மார்கழிப் பாராயணத் திரட்டு) முற்றும்*



# பொங்கி மடாலயம்

வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சிஷ்யரும், திருப்போரூர் முருகன் திருவருள் பெற்றவரும், ஆசு கவிகள் பாடும் அருட்கவியும் ஆன சேதுராமனார் கீலக வருஷம் சிவராத்திரி நாளில் (15-2-1969 -இல்) சென்னை வடதிருமுல்லைவாயில் வைஷ்ணவி ஆலயத்தில், தன் தாயார், தந்தை வழிப் பெரிய தாயார் ஆகியோருடன் தானும் துறவறம் ஏற்றார். வைஷ்ணவி ஆலயத்தில் மூவரும் தங்கி இருந்தனர்.

தாயார் ஸந்யாஸினி மோநாம்பா அம்மையார் 1979 -இல் ஸித்தி அடைந்தார்கள். அவரது புநித உடல் நங்கைநல்லூரில் ஸமாதி செய்யப்பெற்றது. இந்த ஸமாதி மேல் பொங்கி மோநாம்பிகைத் தேவியின் உருவம் ப்ரதிஷ்டை செய்யப் பெற்றது.

1993 -இல் ஸந்யாஸினி ஞாநம்மாள் ஸித்தி அடைந்தார்கள். அவர்களின் புண்ய சரீரம் ஸந்யாஸினி மோநாம்பா அம்மையாரின் ஸமாதிக்குக் கிழக்கில் அடக்கம் செய்யப் பெற்றது. இச் சமாதியின்மேல் ஞாநகணேச கிரிநாதரின் உருவம் திகழ்கின்றது.

10-3-2000 -இல் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் போரூர்க் குமரன் திருவடியில் கூடினர். அவர்தம் அருட்சரீரம் பூர்வாச்ரமத் தாய்தன் ஸமாதிக்கு மேற்கில் நல்லடக்கம் செய்யப் பெற்றது. இதன்மேல் ஸச்சிதாநந்த தண்டபாணியின் திருவுருவம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

பொங்கி மோநாம்பிகை குடிகொண்ட கோயில் ஆதலின் பொங்கி மடாலயம் என்ற பெயருடன் இத்தலம் விளங்கி வருகின்றது. ஆண்டு தோறும் இம்மடத்தில் கார்த்திகை மாதச் சுக்ல பக்ஷ தசமி முதல் பௌர்ணமி வரை ஆறு நாட்களிலும் இன்னிசைகள், சொற்பொழிவுகள், அந்நதாநங்களுடன் விழாக்கள் நடைபெற்றுவருகின்றன.



